
சத்துமிகுந்த, சுவையான
பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்
BRITANNIA
Glaxo
BISCUITS
BRITANNIA
Glaxo
BISCUITS
வளரும் குழந்தைகளுக்கு
சுவையான துணை
பிரிட்டானியா
பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை
லின்டாஸ்-BBC.GLX 6-140 TM
பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.



# கல்கி


ராக்ஷஸ
பங்குனி 15

○

மார்ச் 28
1976

○




## ராகக் குழந்தை

ஆன்மத் தொட்டிலிலிருந்து
ராகக் குழந்தை
தவழ முனைந்தது—

நாக்குத் திடலை
வெளிப் பற்களைக்
கடந்து வந்தது...

குழல் கோயிலின்
பிரதான வாசலில்
தவழ்ந்து நுழைந்தது...

வழி தெரியாமல்
துளைச் சாளரங்களில்
எட்டிப் பார்த்தது...

விரல் கதவுகள்
விசுக்கென மூட
வளைந்து கொடுத்தது........

திறந்த வாசலில்
மழலை பேச
நாதம் பிறந்தது!

நா. உமா



கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...



# 'உங்களுக்கும் மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். உங்கள் அருமைபறிந்து உருவாக்கிய அருமையான செல்வம். வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்தறியாத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலைத் தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு: ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

# ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

## அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
## நீங்களும் உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்



லிண்டாஸ்-J&J.7-140 TM

# படுத்த ஒட்டகம் எழுந்தது!

கும்மியடி பெண்ணே கும்மியடி,
பட்ஜெட் வந்தது கும்மியடி !
வரிகள் குறைந்தன கும்மியடி ;
வறுமையும் போயிற்று கும்மியடி !

கல்கி

மலர் 35

இதழ் 35



"தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா" - பாரதியார்

என்று அகில இந்திய ரேடியோ கொஞ்சம் பாட பேதம் செய்து ஒலிபரப்பலாம். காதுக்கு ஒரு மாறுதலாகவாவது இருக்கும்.

என்றாலும் வறுமை இந்த நாட்டை விட்டு ஓட்டம் பிடிக்க இன்னும் கொஞ்சம் காலம் பிடிக்கும். அதற்கு இப்போது திரு சி. எஸ். சமர்ப்பித்துள்ள பட்ஜெட்டை விட விசால மனத்துடன் தயாரிக்கப்பட்ட இன்னும் பல பட்ஜெட்கள் வர வேண்டும்.

பாலைவனத்தில் பாரம் தாங்காமல் படுத்துவிட்ட ஒட்டகத்தை மீண்டும் எழுந்து நடக்கச் செய்ய அதன் முதுகிலிருந்து சில பண்டங்களை எடுத்து அதன் கண்ணெதிரிலேயே கீழே போடுவார்களாம். ஒட்டகமும் சுமை குறைந்துவிட்டதாக எண்ணி எழுந்து நடக்குமாம்!

அப்படித்தான் இங்கே படுத்துவிட்ட பொருளாதாரத்தை எழுந்து நடக்கச் செய்ய வரிச் சலுகைகள் சில காண்பித்திருக்கிறார்கள். எனவே இதனை மனத்தத்துவ ரீதியான பட்ஜெட் என வர்ணிப்பது பொருந்தும். திரு சி. எஸ். அவர்களும் மனத்தத்துவத்தைப் புரிந்து கொண்டிருப்பதாலேயே, ''வரிகளைக் குறைத்திருப்பதால், இனி வரி ஏமாற்றுதல் இராது, ஒழுங்காக வரி செலுத்துவார்கள் என எதிர்பார்க்கிறேன்'' என்று கூறியுள்ளார். இதைக் கேட்டுப் பாராளுமன்ற அங்கத்தினர்கள் பலர் சிரித்ததுதான் அசந்தர்ப்பமாகவும் அசம்பாவிதமாகவும் தொனிக்கிறது.

இன்றைய பாரத அரசுக்குத் தனது சோஷலிஸ சித்தாந்தத்தையும் தளர்த்த முடியவில்லை; பொருளாதாரத் தேக்க நிலை உருவாகி வருவதை யதார்த்த நோக்கில் பாராமலும் இருக்க முடியவில்லை. இரண்டையும் இணைக்கப் போய்த்தான் திரு சி. எஸ். மிகக் குறைந்த அளவில் புது வருவாய் தேடி (ரூ. 80 கோடி) அதே சமயம் மிக அதிகமான அளவில் திட்ட இனங்களுக்கு ஒதுக்கீடு செய்திருக்கிறார். (ரூ. 7852 கோடி). அரிய சாதனைதான்.

வரிச் சலுகைகள் பல காண்பிக்கப்பட்டிருப்பதானது, எண்பது கோடி ரூபாய்க்குப் புதிய வருவாய் தேடியிருக்கிறார்கள் என்பதையும் இந்த வரிகளையும் மக்கள்தான் தாங்க வேண்டும் என்பதையும் மறைத்துவிடக் கூடும். வரிச் சலுகைகளால் ஏற்படும் இழப்பை (50 கோடி) ஈடு செய்த பிறகு எண்பது கோடி புதிதாகக் கிடைக்குமாறு வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. ஆக உண்மையில் 130 கோடிக்குப் புது வரிகள் விதிக்கப்பட்டுள்ளன.

இது போக, வரிச் சலுகைகள் காரணமாக உற்பத்தியும் வர்த்தகமும் அதிகரிப்பதால் அரசாங்கத்துக்கு வரி வருவாய் குறையாது; அதிகரித்தால்கூட வியப்பதற்கில்லை.

சென்ற ஆண்டு பட்ஜெட்டில் துண்டுவிழக்கூடிய தொகை 247 கோடி என்று எதிர்பார்த்திருந்தாலும் உண்மையில் 490 கோடி துண்டு விழுந்தது. அதே போல் இந்த ஆண்டு பட்ஜெட்டில் 320 கோடி துண்டுவிழும் என எதிர்பார்த்தாலும் அது மேலும் பல கோடிகளாய் இறுதியில் அதிகரிக்கலாம். இவற்றையெல்லாம் நோட்டு அச்சடித்துத்தான் சமாளிக்க வேண்டும். அப்படியிருந்தும் பணவீக்கம் இராது என்று திரு சி. எஸ். எதிர்பார்க்கிறார் என்றால் இப்போதைய பட்ஜெட் சேமிப்பை ஊக்குவிக்கும், முதலீடுகளைப் பெருக்கும், கள்ளப் பணப் புழக்கத்தைக் குறைக்கும் என்று நம்புவதால்தான்.

தொழில் வர்த்தக நிறுவனங்களுக்கு எதிர்பார்த்த அளவில் சலுகைகள் கிட்டாதது அந்த வட்டாரத்தில் ஏமாற்றத்தையே ஏற்படுத்தியிருக்கிறது. எனினும் திரு சி. எஸ். அவர்களின் பரம

வைரீ கூட இந்தப் பட்ஜெட்டுக்காக அவரை அதிகமாகக் குறை கூற முடியாது. வழக்கமான பாதையிலிருந்து விலகிப் புதிய திருப்பத்தில் அடியெடுத்து வைத்திருப்பதே பெரிய காரியம்.

இந்தச் சந்தர்ப்பத்தைத் தொழில் வர்த்தகத் துறையில் உள்ள ஊழியர்களும், அதிகாரிகளும், முதலாளிகளும் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டு, தன்னலத்தை மறந்து, நாட்டு நலனையே கருதி உழைத்தார்களென்றால் அதனால் விளையும் நற்பலன்கள், அடுத்த பட்ஜெட்டை இன்னமும்கூட முன்னேற்றகரமான கருத்தோடு தயாரிக்க உதவி செய்யும்.

இதற்கு அனுசரணையாகவே நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்குப் பிறகு வேலைநிறுத்த நோய் ஒழிந்து, உழைப்பார்வம் பெருகியுள்ளது.

அகில இந்திய ரேடியோவில் மட்டும் ஒலிக்கும் கபிட்சக் கும்மி, ஒவ்வொரு இல்லத்திலும் மகிழ்ச்சிக் குரலில் ஒலிக்குமாறு தேசப் பொருளாதாரம் முன்னேறட்டும்.

# மூட்டை அவிழ்ந்தது; நெல்லிக்காய் சரிந்தது!

நெல்லிக்காய் மூட்டையைப் பிணைத்துக் கட்டியிருந்த கயிறு நைந்து அறுந்தது. மூட்டை பிரிந்துகொள்ள, நெல்லிக்காய்கள் சரிந்தன !

குஜராத்தில் ஜனதா ஆட்சி சரிந்து ராஷ்டிரபதி ஆட்சி ஏற்பட்டுள்ளது.

ஐந்து கட்சிகள் ஒன்றுடன் ஒன்று ஒட்டாமல் ஒப்புக்கு இணைந்திருந்தன. அதுவும் போதவில்லை; ஆட்சியில் நீடிக்க கே.எம்.எல்.பி. கட்சியின் ஆதரவும் தேவைப்பட்டது. அந்த ஆதரவை நம்பியது மண் குதிரையை நம்பியதாக முடிந்தது.

குஜராத்தி மக்கள் அறிவாளிகள்; வியாபார விஷயங்களில் கூர்ந்த மதி படைத்தவர்கள். அவ்வாறிருக்கக் கடந்த பத்து ஆண்டுகளாகவே அவர்கள் தங்களுக்கு ஒரு ஸ்திரமான ஆட்சியை ஏற்படுத்திக் கொள்ளாமல் இருப்பது வியப்பளிக்கிறது. காரணம், கட்சிக் கொள்கைகளின் அடிப்படையில் வோட்டுப் போடாமல் வேறு பல காரணங்களை முன்னிட்டுத் தலைவர்களைத் தேர்ந்தெடுப்பதுதான்.

நிகர விளைவு, முதலமைச்சராக வருபவர், ஆட்சியைக் கவனிப்பதற்குப் பதில் ஆட்சியில் நீடிப்பதற்கான ஆயத்தங்களிலேயே காலத்தை விரயம் செய்ய நேர்கிறது.

ஜனாதிபதி ஆட்சிப் பிரகடனத்துக்குப்பிறகு சட்ட சபை கலைக்கப்படவில்லை; தாற்காலிகமாக அதன் நடவடிக்கைகள் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன. எனவே இந்தச் சட்டசபையே நீடித்து மாற்றுக் கூட்டணி ஆட்சிக்கு வர வாய்ப்பிருக்கிறது. அதற்கு முன்பாகக் கூட்டணிக்குக் கட்சி சேர்ப்பதும், கட்சிக்கு எம்.எல்.ஏ.க்களைச் சேர்ப்பதும் பெரிய வியாபாரமாக நடக்கக் கூடும். இதையெல்லாம் தவிர்க்க அடுத்த தேர்தல் வரை ராஷ்டிரபதி ஆட்சியே என்று அறிவித்துச் சட்டசபையைக் கலைத்து விடலாம்.

அதோடு, எந்த ஒரு கட்சியோ அல்லது பொதுவான ஒரு தேர்தல் விக்ஞாபனத்தைக் கொண்ட கூட்டணியோ முழுமையான பெரும்பான்மை பலம் பெற்றிருந்தாலொழிய மக்கள் ஆட்சி ஏற்படாது என்று விதித்து விடுவது நல்லது. அப்போதுதான் அரசியல் லஞ்ச ஊழலுக்கு நாட்டில் பஞ்சம் ஏற்படும்.

குஜராத் தேர்தல், இரண்டு காங்கிரஸ்களுக்குத்தான் மக்களிடம் செல்வாக்கு உள்ளது என்பதைத் தெளிவாகக் காட்டியுள்ளது. மற்ற கட்சிகள் இந்த இரு பிரிவுகளில் ஏதேனும் ஒன்றுடன் ஒட்டிக் கொண்டு பிராபல்யம் தேடுவன. இரு காங்கிரஸ்களிடையே கொள்கை அளவில் வித்தியாசம் ஏதும் கிடையாது என்பதை எண்ணிப் பார்த்து, அறிவாளிகளான குஜராத் மக்கள் தங்களுக்கு ஒரு ஸ்திரமான அரசாங்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

ராஜாஜி சிந்தனை

## துன்பம் தராதீர்!

இன்று இந்தியாவில் பெருங் கீர்த்தி பெற்றுள்ள பெரியார்களில் ஒருவர் மரங்கள் மனிதனைப் போலவே நோவை உணர்ந்து கொள்கின்றன என்று கண்டு பிடித்திருக்கிறார். எதற்காகவேனும் ஒரு மரத்தின் பாகத்தை வெட்டி எடுக்கவேண்டி ஏற்பட்டால் அப்படி வெட்டுவதால் உண்டாகும் காயம் எளிதில் ஆறும்படியாக நாம் வெட்ட வேண்டும். தவறாக வெட்டினால் அது அதிகமாகத் துன்பமுறும். அது நமக்குப் புலனாகாமல் இருக்கலாம். அதனால் அது துன்புறவில்லை என்று அர்த்தமல்ல. கிளை ஒன்றை வெட்ட வேண்டுமானால், அறுவை வைத்தியர் வெட்டுவது போல் கவனமாக வெட்ட வேண்டும். கூர்மையான கத்தியைக் கொண்டு ஒரே வெட்டாக வெட்டினால் காயம் விரைவில் ஆறிவிடும். அப்படிச் செய்யாமல் கையைக் கொண்டு முறித்தால் பெரிய காயமாகிவிடும். எளிதில் ஆறாது. நம்முடைய உடம்பில் ஏதேனும் ஒரு கட்டி ஏற்பட்டால் அதை நாம் விரலைக் கொண்டு கீறுவதில்லை. கூர்மையான கத்தியைக் கொண்டே வைத்தியர் கீறுவார். அதுபோலவே நாம் மரக் கிளையை வெட்டவோ அல்லது பழமோ மலரோ பதிக்கவோ விரும்பினால் அதையும் கவனமாகவே செய்ய வேண்டும்.

—மரங்களும் செடிகளும் என்ற கட்டுரையில்


உதய சூரியனு?
தி.மு.க
மீது
ஊழல் புகார்கள்
ஷா


இந்திக்கு எங்கள் ஆதரவு!
இந்தி நாடெங்கும் பரவ வேண்டும்!—
மனோகரன்
அ.தி.மு.க
இந்திக்கு
ஆதரவு


அதிகமா
எதிர்பார்த்தோம்..
ஹூம்!
சேலம் உருக்காலைக்கு
மத்திய உதவி
3 கோடி
ரூபாய்

# வேத மதத்தின் விசேஷ அம்சங்கள் (7)



ஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய
ஸ்வாமிகள்

"என் வர்ணாச்ரம தர்மம்" (My Varnashrama Dharma) என்றே காந்தி ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதிலே, 'இந்த வர்ணாச்ரமம் என்பது மநுஷ்யனுக்குத் தானாக ஏற்பட்டது. இது மனித இயற்கைக்குள்ளேயே இயல்பாக உள்ளடங்கியிருப்பது. இது ஒருத்தனின் பிறப்போட்டேயே சேர்ந்து விட்ட விஷயம். இந்த இயற்கை விதியையே ஹிந்து மதம் ஒரு ஸயன்ஸாக, சாஸ்திரமாக ஒழுங்குபடுத்தித் தந்திருக்கிறது' என்கிறார்.

(Varnashrama is, in my opinion, inherent in human nature and Hinduism has simply reduced it to a science. It does attach to birth.)

'இந்த ஏற்பாடு தொழில்களை நாலாகப் பிரித்துக் கடமைகளைத்தான் தருகிறதே தவிர சலுகைகளைத் தரவில்லை. ஒருத்தன் தனக்கு உசத்தி கொண்டாடிக் கொள்வதோ, இன்னொருத்தனை மட்டம் தட்டி வைப்பதோ ஹிந்து மதத்தின் உயிர்ப் பண்புக்கே விரோதமானது. அவரவரும் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொண்டு வாழவும், சமுதாயத்தின் சக்தியை விரயமாக்காமல் சிக்கனமாகக் காக்கவுமே வர்ணாச்ரமம் இருக்கிறது' என்றெல்லாம் காந்தி ரொம்பவும் சிலாகித்துச் சொல்லியிருக்கிறார்.

(The division defines duties, they confer no privileges... Varnashrama is self-restraint and conservation and economy of energy.)

இப்படியே, 'ஜாதிப் பிரிவினை' என்று இப்போது சொல்லப்படுகிற வர்ண தர்மத்தை காந்தி ஆதரித்துக் கொண்டே போய், 'நான் தீண்டாமையைத்தான் தீமை என்று எதிர்த்துச் சண்டை போடுகிறேனே யொழிய, வர்ணாச்ரமம் என்பது ஸயன்ஸ் மாதிரி ஒரு சத்தியத்தையே சொல்கிறது என்பதால் அதை ஆதரிக்கவே செய்கிறேன். ஒருத்தனுடைய பிறப்பை அடிப்படையாக வைத்துத் தொழில்களைப் பிரித்துக் கொடுக்கிற இந்த ஏற்பாடு சமுதாய வாழ்வுக்கு ரொம்பவும் ஆரோக்கியமூட்டுவது என்பதே என் அபிப்பிராயம். இது ஏதோ குறுகிய புத்தியால் செய்த ஏற்பாடல்ல. இந்த ஏற்பாடு ஒரு தொழிலாளிக்குக்கூடப் பெரிய அறிவாளிக்குள்ள அந்தஸ்தைத் தருகிறது என்பதே என் அபிப்பிராயம்' என்றெல்லாம் சநாதனிகளை விடப் பாராட்டிப் பேசுகிறார்.

(I have often shown the distinction between Varnashrama and untouchability. I have defended the one as a rational scientific fact and condemned the other as an excrescence and unmitigated evil. I do regard Varnashrama as a healthy division of work based on birth. Varnashrama in my opinion was not conceived in any narrow spirit. On the contrary it gave the labourer the same status as the thinker.)

புது ஸயன்ஸ், டெக்னாலஜி ஆகியவற்றால் உண்டான மெஷின்கள், பெரிய பெரிய ஆலைகள் — புதிதாக ஏற்பட்ட நகர வாழ்க்கை முறை (town-life) ஆகியனவே பழைய முறையில் பாரம்பரியமாகத் தொழில்களைச் செய்வதற்கு எதிராக உண்டான முக்கியமான குந்தகங்களாகும். எளிய வாழ்க்கையில் மெஷினுக்கு அதிகம் இடமில்லை. கைத்தொழில்களை செய்து, எல்லோரும் எளிமையாகக் கிராம வாழ்க்கை நடத்தினால் பழைய ஏற்பாட்டைக் காப்பாற்றி விடலாம். 'மநுஷ்ய சக்தியைக் கொண்டுதான் காரியங்கள் நடக்க வேண்டும். ராக்ஷஸ மெஷின்கள் கூடாது. வாழ்க்கையே ரொம்ப எளிமையாக இருக்க வேண்டும். அத்தியாவசியத் தேவைக்கு அதிகமாகத் துளிக்கூட டாம்பீகமே இருக்கக் கூடாது. கிராம வாழ்க்கை முறையே இந்தியாவின் ஜீவநாடி' என்றெல்லாம்தான் காந்தியும் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தார். இப்படி அவர் சொன்னதும் — அவர் அப்படி நினைத்தாலும், நினைக்காவிட்டாலும் — வர்ண தர்மத்தை நிலைப்படுத்துவதற்கு அநுகூலம் தான்.

ஒரு கேள்வி கேட்கலாம். வேறு எந்தத் தேசத்திலும் இல்லாமல் நம் தேசத்தில் மட்டும் எதற்காக இந்தப் பாரம்பரியத் தொழில் வித்தியாசம் இருக்க வேண்டும் என்பதுதான் அக்கேள்வி. (தொடரும்)

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]




# சென்னையில் ஜம்போ

லண்டன் மிருகக்காட்சிச் சாலையில் ஒரு மிகப் பெரிய யானை இருந்தது. அதன் பெயர் ஜம்போ. அதனை பார்னம் என்ற அமெரிக்க சர்க்கஸ்காரர் வாங்கிப் பல காட்சிகளில் பயன்படுத்திக் கொண்டார்.

பெரிய பொருள் எதுவானாலும் அதனை ஜம்போ என்று வர்ணிக்கும் அளவில் அந்த யானையின் புகழ் பரவியது. ஜம்போ ஐஸ்கிரீம், ஜம்போ ஐஸ் பெட்டி, ஜம்போ முகப் பவுடர் டப்பா.... இப்போது ஜம்போ விமானம்.

போயிங் — 747 பிரும்மாண்டமானது என்றால் போதாது. பறக்கும் மாளிகை எனலாம். பயணிகள் விச்ராந்தியாக அமர்ந்து அளவளாவுகிற விசாலமான 'மகாராஜா கூடம்' விமானத்தினுள்ளே மூன்றாவது மாடியில் இருக்கிறது என்றால் ஒருவாறு இதன் பரிமாணங்களைப் புரிந்து கொள்ளலாம்.

தற்போது ஏர்–இந்தியாவிடம் ஐந்து ஜம்போக்கள் உள்ளன. மேலும் இரண்டுக்கு ஆர்டர்கள் தரப்பட்டுள்ளன. சென்னைக்கு முதன் முதலாக ஜம்போ வருகிறது. சிங்கப்பூர்—ஸிட்னி (ஆஸ்திரேலியா) மார்க்கத்தில் பறக்கும்.

ஜம்போக்கள் தவிர முன்பு வாங்கிய போயிங் 707 விமானங்கள் ஒன்பது. ஏர்–இந்தியா பயணிகளைச் சுமந்து பறக்கின்றன. 1948ல் வாரம் ஒரு முறை லண்டனுக்குப் பறந்த விமானத்துடன் தொடங்கியது ஏர்–இந்தியா. இன்று லண்டன் மார்க்கமாக நியூயார்க்குக்குத் தினம் ஒரு விமானம் பறக்கிறது. இன்னும் மேலே மாஸ்கோ மார்க்கமாகச் செல்கிறது; கிழக்கே டோக்கியோ, ஸிட்னி மார்க்கங்களிலும் மேற்கே நைரோபி, மரீஷியஸ் திசைகளிலும் செல்கின்றன.

ஜே. ஆர். டி. டாடாவின் தலைமையில் பிரமிக்கத் தக்க முன்னேற்றம் அடைந்த ஏர் இந்தியா, தன் வருவாயில் தொண்ணூறு கோடிக்கும் அதிகமாக மீண்டும் தொழிலிலேயே ஈடுபடுத்தியது. அரசின் முதலீடு 62 கோடிதான்; இன்று ஏர் இந்தியாவுக்கு உள்ள சொத்தின் மதிப்பு 172 கோடி. ஏர்இந்தியாவின் இயக்கத் திறனுக்கு இதுபோன்ற ரூபாய்க் கணக்குகள் ஏராளமாய்த் தரலாம். ஆனால் கணக்குக் காட்டுவது மட்டுமல்ல அதன் சிறப்பு. ஏற்றுமதிப் பண்டங்களை மிக நவீன முறையில் சுமந்து செல்லவென்றே விமானங்களை ஒதுக்கியது முதல் அனுபவம் மிக்க விமானத் தளபதிகளை நியமிப்பது வரை



உபசரணைப் பெண்களின் பல ரக உடைகள்.



அயல்நாடுகளுக்குப் பண்டங்கள் ஏற்றுமதியில் மிக நவீன முறைகள் கையாளப்படுகின்றன.

விமானத்தின் உட்புறச் சுவர்களும் இந்திய பாணி ஓவியங்களால் அழகுபடுத்தப்பட்டுள்ளன. அஜந்தா அப்ஸரஸ்கள் முதல் நாட்டுப்புற நங்கை வரை பல ரகப் பெண்களை மனோரம்மியமான சூழல்களில் காணலாம்.

இதனாலெல்லாம் அயல்நாட்டவர் ஏர் இந்தியா விமானத்தினுள் ஏறியவுடனேயே ஏதோ ஒரு புதிய உலகத்துக்கு வந்து விட்டது போல் உணர்கிறார். பாரத மண்ணில் அடியெடுத்து வைக்கு முன்னரே அந்தப் பண்பாட்டின் சில அம்சங்களைப் புரிந்து கொள்கிறார்.

சுற்றுலாப் பயணிகளின் கவனத்தை ஈர்த்தால் போதாது. வசதிகளைப் பெருக்க வேண்டும். இதற்காகவே ஏர்–இந்தியா பம்பாய் விமான நிலையத்தை யொட்டி ஆறு கோடி ரூபாய் செலவில் ஐந்து நட்சத்திர ஹோட்டல் ஒன்றைக் கட்டியிருக்கிறது. ஸென்டார் என்று பெயர் கொண்ட இந்த ஹோட்டல் அறைகளின் தனிச் சிறப்பு என்னவெனில், சுவர்களை ஒலி ஊடுருவாது. இந்த ஏற்பாடு இல்லாது போனால் விமானங்கள் போடுகிற இரைச்சலில் தூங்குவது எப்படிச் சாத்தியமாகும் ?

பயணிகளைத் தூங்க வைத்தால் போதுமா? அவர்களைப் பத்திரமாக அவர்கள் ஊருக்குத் திரும்பக் கொண்டு போய்ச் சேர்ப்பது அதைவிட முக்கியமல்லவா ? எனவே, ஏர்–இந்தியா பைலட்டுகள் கடுமையான பரிசோதனைகளுக்கு அடிக்கடி உள்ளாகிறார்கள். மருத்துவம், சட்டம் போன்ற எந்தத் துறையிலும் ஒரு முறை சான்றிதழ் பெற்றுவிட்ட

எத்தனையோ பல அம்சங்கள் நம்மை வியப்பில் ஆழ்த்தும்.

உதாரணமாக மேலட்டையில் உள்ள ஜம்போ விமானத்தின் உபசரணைப் பெண்ணை எடுத்துக் கொள்ளுங்கள். அவளைத் தேர்ந்தெடுத்தது அழகுக்காகவா, அறிவுக்காகவா, பண்பாட்டுக்காகவா, பொறுப்புணர்ச்சிக்காகவா, கடின உழைப்புக்காகவா என்றால் இவற்றில் ஏதேனும் ஒன்றுக்காக அல்ல, அனைத்துக்காகவும்தான் என்ற பதில் கிடைக்கும்.

ஒரு விமான நங்கை முப்பது வயது வரை பணியாற்றலாம்; உத்தியோகம் நாற்பது வயது வரைகூட நீடிக்கப்படலாம். ஆனால் திருமணமாகக் கூடாது. பெரும்பாலோர் முப்பது என்ன அதற்கு வெகுகாலம் முன்பாகவே கல்யாணம் செய்து கொண்டுவிடுகிறார்கள். அதனால் ஏர் இந்தியா சதா விமான நங்கைகளைச் சல்லடை போட்டுத் தேடிப் பயிற்சி அளித்தபடி இருக்கிறது. இன்று பணியாற்றும் நானூறு பேர்களில் அயல்நாட்டவரும் உண்டு. அனைவருக்கும் பன்னிரண்டு வாரம் கடுமையான பயிற்சி தரப்படுகிறது. இதற்கென்றே உள்ள பயிற்சிக் கேந்திரத்தில் விமானத்தின் மாதிரி ஒன்று தயாரித்து வைத்துள்ளனர். பறக்கும் விமானமாகவே அதனைப் பாவித்துத் தக்கவரின் மேற்பார்வையில் உபசரணைப் பணியாற்றுகின்றனர். இதைத் தவிர மேக்–அப் கலை, சமையல் கலை, கேச அலங்காரக் கலை முதலியவற்றிலும் தேர்ச்சி பெற வேண்டும். அழும் குழந்தையைச் சமாளிக்கவும் ஆபத்துக் காலத்தில் பயணிகளுக்கு உதவவும் தெரிந்திருக்க வேண்டும்.

சரிதார் கம்மீஸ் அல்லது புடவை அணிகிறார்கள் உபசரணைப் பெண்கள். ஜம்போவில் உள்ள ஒரு விமானப் பெண் ராஜஸ்தான் பாணியில் உடையணிந்து கோபிகா ஸ்திரீ போலத் தோற்றம் அளிப்பாள். ஜம்போ



ஜம்போவின் உட்புறம்.
– 'மகாராஜா கூடம்.'

ஒருவர் மீண்டும் பயிற்சி பெறவோ பரீட்சை எழுதவோ போவது கிடையாது. ஆனால் ஏர்-இந்தியா பைலட்டுகள் ஆறு மாதங்களுக்கு ஒரு முறை புனர்பயிற்சி பெறுகிறார்கள். பரீட்சை எழுதுகிறார்கள்.

1500 மணி நேரம் ஏற்கெனவே பறந்திருந்தால்தான் ஏர்-இந்தியா விமானியாக விண்ணப்பிக்க முடியும். தேர்வு பெற்றால் அதன் பின்னர் கடினமான பயிற்சி காத்திருக்கிறது. பம்பாயில் பூமி மட்டத்திலேயே இருந்த இடத்தை விட்டு நகராமல் ''பறக்கும்'' விமானம் ஒன்று இருக்கிறது. இந்த போயிங்-707 விமானத்தில் ஆகாயத்தில் பறக்கும்போது என்னவெல்லாம் நிகழுமோ அவை யெல்லாம் நடக்கும். விநாடிக்கு விநாடி ஆகாயத்தில் பறப்பதாகவே பாவித்துப் பயிற்சி பெறலாம். ஒலிகள், உணர்வுகள் எல்லாம் உண்மைக்கு மாறுதலின்றி அப்படியே இருக்கும். இடி, புயல், மழை ஆகியவற்றைக்கூடச் செயற்கையாகச் சிருஷ்டித்துச் சமாளிக்கும் முறைகளைப் போதிக்கிறார்கள்.

இதில் பயிற்சி பெற்றவர் உதவி விமானியாகப் பறக்கிறார். அங்கே பிரதான விமானியின் மேற்பார்வையில் இயங்கி அனுபவம் பெறுகிறார்.

ஜம்போ விமானங்களுக்கு அமெரிக்காவிலேயே பல விமானிகள் பயிற்சி பெற்றுத் திரும்பினர். இப்போது தரையிலேயே நகராமல் இயங்கும் ஜம்போ ஒன்றை பம்பாயில் நிறுவப் போகிறார்கள். இப்படி நிறுவாமல் பறக்கும் விமானத்திலேயே பயிற்சி பெறுவதெனில் செலவு வானே அளாவும்! ஒரு ஜம்போ ஒரு மணி நேரம் ஆகாயத்தில் பறக்க ஆகும் செலவு ரூ. 20,000. ஆனால் மேலே விவரித்த பயிற்சி ''விமான''த்தை ஒரு மணி நேரம் இயக்க ஆகும் செலவு ரூ. 2000.

ஜம்போவில் 24 முதல் வகுப்புப் பயணிகளும் 329 சுற்றுலாப் பயணிகளும் செல்லலாம். சினிமாப் பார்க்கலாம், மேனாட்டு, இந்திய இசைக் கச்சேரிகளைக் கேட்கலாம். அடிக்கடி பயணம் செய்பவர்கள் இருக்கலாம் என்பதால் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை இசையையும் மாதமொரு முறை சினிமாவையும் மாற்றுகிறார்கள்.

போயிங் 707 விமானத்தில் 30,000 பாகங்களுக்கு அதிகமாக உள்ளன. இவற்றில் ஏதேனும் ஒன்றிரண்டில் கோளாறுனாலும் ஆபத்துத்தானே? எனவே விமான வினைஞர்களை உருவாக்குவதில் ஏர்-இந்தியா விசேஷ கவனம் செலுத்துகிறது.

ஜம்போ விமானத்துக்கு இதுவரை இரண்டாயிரம் வினைஞர்கள் பயிற்சி பெற்றுள்ளனர். இவர்களில் பொறி இயல் நிபுணர்களும் பலர் உண்டு. பம்பாயில் இதற்கென இரு வகுப்புக்கள் இரு உபாத்தியாயர்களுடன் சிறிதாக ஆரம்பமான பள்ளி இன்று மிகப் பெரிதாக வளர்ந்து ஜம்போவாகி விட்டது!

ஆரம்பத்தில் ஸ்ரீ டாடா ஒரு குட்டி விமானத்தில் தபாலுடன் பறந்து போய் விமானப் போக்குவரத்தை இந்தியாவில் ஆரம்பித்து வைத்தார். இன்று ஏர்-இந்தியா உலகளாவியதாக வளர்ந்து விட்டது.

இந்த வளர்ச்சி காரணமாகவே வேலை நிறுத்தமெனில் ஏற்படும் நஷ்டமும் ஜம்போ அளவினதாக விசுவரூப மெடுக்கிறது. சென்ற ஆண்டு விமானிகளின் வேலைநிறுத்தத்தால் நஷ்டம் 11 கோடி.—அதாவது உங்களுக்கும் எனக்கும் ஏற்பட்ட நஷ்டம்!

ஆனால் டாடா அதிலும் சில நன்மைகள் இருந்தன என்கிறார். அரசாங்கம் விட்டுக் கொடுக்காமல் பிடிவாதமாக இருந்ததால், ஒரு யதார்த்த நோக்கு எல்லா ஊழியர்களிடமும் ஏற்பட்டது. ஒழுக்கமும் கட்டுப்பாடும் வளர்ந்தன. இவ்வளவு பெரிய நஷ்டத்துக்குக் காரணமான சக்திகள் இயங்கும் விதத்தைப் புரிந்து கொள்வது சாத்தியமாயிற்று.

இப்படி ஒவ்வொரு அனுபவத்திலிருந்தும் படிப்பினை பெறத் தலைமையும் தளபதிகளும் ஊழியர்களும் தயாராக இருக்கும்போது ஏர்-இந்தியா ஜெட் வேகத்தில் முன்னேறக் கேட்பானேன்?

—குட்டி கிருஷ்ணன்

---



## சுவரில் ஒரு விழி!

சென்னை கதீட்ரல் சாலையில் கண் போன்ற அமைப்பிலே ஒரு கட்டடம் உருவாகியுள்ளது. கண் ஆஸ்பத்திரியேதான்.

'கண்மணி' போலுள்ள இரு கதவுகளைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தால் வெளிப்புற வரிசையில் நோயாளிகள் காத்திருப்பதற்கும் உட்புற வரிசையில் நோயாளிகளைப் பரிசிப்பதற்கும் இடங்கள் உள்ளன. இரு வார்டுகள் ஏழை நோயாளிகளுக்காக இருக்கின்றன. கீழ்த் தளத்திலிருந்து சக்கர நாற்காலியில் மேல் தளத்துக்கு நோயாளிகளை இட்டுச் செல்லச் சாய்வுப் பாதை இருக்கிறது. கண் பரிசோதனைக்கான நவீன இயந்திரங்கள் உண்டு.

மாடியில் முதல் தளத்தில் ஆபரேஷன் தியேட்டர். இந்தத் தியேட்டரில் ஆபரேஷன் நடக்கும்போது வைத்திய மாணவர்களும் டாக்டர்களும் கண்ணாடித் திரைக்கு வெளியே இருந்து ஆபரேஷனைப் பார்த்தறியலாம். 'காடராக்டை'க் குளிர வைத்து ரண சிகிச்சை செய்ய விசேஷ இயந்திரங்கள் வைத்திருக்கிறார்கள்.

'வெல்லவே இன்ஜினீயரிங்' ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஜே. எஸ். ராஜா சிங் வடிவமைத்தது இக்கட்டிடம்.

— பி.எஸ்.எம்.



ஒரு கப் டீ சாப்பிட்டவுடன் என் அன்றாட வாழ்க்கை தொடங்குகிறது.

பத்திரிகைகளை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்து விடுகிறேன். பத்திரிகைச் செய்திகள் அன்றையச் சூழ்நிலைக்கு என்னைத் தயாராக்குகின்றன. அரசியல் நிலவரங்களைக் கூர்ந்து கவனிக்கிறேன். இது இரத்தத்தில் ஊறிப்போன விஷயம்!

வட ஆர்க்காடு மாவட்டத்தில் பள்ளி மாணவனாக இருந்த காலத்திலிருந்தே எங்கள் ஊருக்கு அவ்வப்போது வரும் அரசியல் தலைவர்களைக் கூர்ந்து கவனித்து அவர்கள் பக்கத்தில் போய் நிற்பது எனக்குப் பழக்கமாகிப் போய்விட்டது. விளையாட்டுக்களில் எத்தனை அக்கறை காட்டினேனோ, அத்தனை அக்கறை இதிலும். என் அரசியல் ஈடுபாட்டின் அஸ்திவாரம் அப்போதே போடப்பட்டு விட்டது.

எனக்கு அநேகமாகக் காலை ஆகாரம் இட்டிலியாகத்தான் இருக்கும். இப்போது எனக்கு டீ தேவையில்லை. எழுந்தவுடன் ஒரு கப் சாப்பிடுவதோடு சரி!

ஒன்பது மணி அளவில் சத்தியமூர்த்தி பவனில் உள்ள காங்கிரஸ் காரியாலயத்துக்குக் கிளம்புகிறேன். என் பார்வை என்னை அறியாமலேயே மேஜை மீதுள்ள டெலிபோன் மீது படிகிறது. என் கண்கள் குளமாகும் உணர்ச்சி. சட்டென்று கண்களைத் துடைத்துக்கொண்டு வீட்டை விட்டுக் கிளம்புகிறேன்.

# ஒரு நாள்: பி. ராமச்சந்திரன்

இதற்குக் காரணம் இருக்கிறது. ஆறு மாத காலத்துக்கு முன்வரை அனேகமாக இந்த நேரத்தில் அந்த டெலிபோன் மணி அடிக்கும். காமராஜ் அவர்கள் நகரில் இருக்கும் நாட்களாக இருந்தால், நிச்சயமாக அந்த டெலிபோன் அழைப்பு அவரிடமிருந்துதான் வரும். சத்தியமூர்த்தி பவன் போவதற்கு முன் திருமலைப் பிள்ளை தெருவுக்கு வந்துவிட்டுப் போகச் சொல்லுவார்.

1945 அல்லது 1946ம் ஆண்டாக இருக்கும். நான் பச்சையப்பன் கல்லூரியில் பொருளாதார பாடத்தை எடுத்துக் கொண்டு ஹானர்ஸ் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். அப்போதுதான் தலைவர் காமராஜுடன் அறிமுகம் ஏற்பட்டது. அது நெருங்கிய நட்பாக வளர்ந்தது. பச்சையப்பன் கல்லூரியில் படிக்கும்போதே எனக்கு அரசியலில் ஈடுபாடு இருந்தாலும், நான் எப்போதுமே ஒரு 'மாடரேட்' (மிதவாதி)தான். தீவிரவாதியில்லை.

கல்லூரியின் வாயிலிலிருந்து நேராக அரசியல் முகாமுக்குப் போனவன் இல்லை நான். படிப்பை முடித்துக் கொண்டு இரண்டு மூன்று ஆண்டுகள் கோவையில் உள்ள கல்லூரி ஒன்றில் 'சரித்திர பாட 'லெக்சரர்' ஆக இருந்தேன். அதை விட்டு விட்டு செக்ரடேரியட்டில் ஓராண்டு பணியாற்றினேன். அப்புறம்தான் முழு நேர அரசியலுக்கு வந்தேன்.

கல்லூரி ஆசிரியர் அனுபவமும், செக்ரட்டேரியட் அனுபவமும் இப்போது எனக்கு நன்கு உதவுகின்றன. என்னிடம் யோசனைகள் கேட்க வரும் தொண்டர்களுக்கு யோசனைகள் சொல்ல ஆசிரியர் அனுபவம் உதவுகிறது. காரியாலயத் தபால்களை உடனடியாகக் கவனிக்க செக்ரடேரியட் அனுபவம் துணை வருகிறது.

வீட்டிலிருந்து கிளம்பு முன் டயரியைப் புரட்டுகிறேன், இன்று காலையில் நாம் கலந்து கொள்ள வேண்டிய வேறு நிகழ்ச்சி ஏதாவது இருக்கிறதா என்று தெரிந்து கொள்ள. இன்று அப்படி ஏதும் நிகழ்ச்சி இல்லை.

ஆனால் ஒரு விஷயம் நினைவுக்கு வருகிறது. அம்பத்தூர் இளைஞர் ஒருவருக்கு வரும் மாதம் எட்டாம் தேதி திருமணம். கலாட்டாப் பேர்வழிகள் என்று சிலபேரைக் கணக்கிட்டு, சமீபத்தில் போலீஸார் 'ரவுண்ட் அப்' செய்து காவலில் வைத்தபோது இந்த அப்பாவி இளைஞரும் மாட்டிக் கொண்டார். அவரை ஜாமீனில் விடுவிக்க ஏற்பாடு செய்திருந்தோம். யாரோ வேண்டாதவர்கள், இவர் பெயரையும் போலீஸில் கொடுத்திருக்கலாம். அந்த அப்பாவி இளைஞர் இன்று

என்னை வந்து சந்தித்து நன்றி தெரிவித்துப் போக விரும்பி யிருந்தார். அவருக்கு இப்போதே திருமண வாழ்த்து தெரிவித்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொள்கிறேன். ஒருவேளை திருமண தினத்தன்று நான் வெளியூர் போக வேண்டி யிருக்கலாம்.

காங்கிரஸ் அலுவலகத்துக்கு வரும்போது மணி பத்தரையாகி விடுகிறது. பல தொண்டர்கள் ஆளுக்கு ஒரு பிரச்னையுடன் காத்திருக்கிறார்கள். அமைதியாகக் காத்திருக்கிறார்கள். இந்தப் பண்பு என்னைப் பெருமிதமடையச் செய்கிறது.

சமீபத்தில் திருச்சியில் நடந்த மகாநாட்டில் லட்சக் கணக்கான மக்கள் கூடியிருந்தும் அவர்கள் கடைப்பிடித்த அமைதிப் பண்பு என்னை மிகவும் பிரமிப்பில் ஆழ்த்தியது. என் வாழ்நாளில் ஆனந்த உணர்ச்சி பொங்கி வழிந்த நேரம் அதுதான். பண பலம் இல்லாமல், அன்பின் பலத்தாலும், தெய்வத் திருவருளின் துணையாலும் நடந்த அந்த மகாநாட்டின் நிகழ்ச்சிகள் என்னைப் புல்லரிக்கச் செய்தன. சில வெளி மாநிலப் பேச்சாளர்கள் ஆங்கிலத்தில் பேசிய நேரத்திலும் எத்தகைய அமைதி நிலவியது!

தொண்டர்களுக்கு என்னிடம் அவர்கள் பிரச்னைகளைச் சொன்னாலே ஒரு நிம்மதி. என்னால் முடிந்தவரையில் அவர்களுக்கு ஆறுதலும் தேறுதலும் சொல்லி அனுப்புகிறேன்.

நானும் வாழ்க்கையில் எத்தனையோ வெற்றி தோல்விகளைப் பார்த்தவன்தானே! ஆகையால் அவர்களுக்கு ஆறுதல் சொல்ல முடிகிறது.

1952 தேர்தலில் செய்யார் தொகுதியில் சட்டமன்றத் தேர்தலில் நின்றேன். தோற்றேன். அப்போது நான் இளைஞர் காங்கிரஸ் அமைப்பாளர். 1957ம் தேர்தலில் அதே தொகுதியில் நின்று வெற்றி பெற்றேன். 1962ம் ஆண்டு தேர்தலில் பெருமாநல்லூர் தொகுதியில் நின்று சட்ட மன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். 1967ம் ஆண்டு தேர்தலில் அதே தொகுதியில் தோல்வியையும் சந்தித்தேன். 1971ம் ஆண்டில் திருத்தணித் தொகுதியில் பாராளுமன்றத்துக்கு வேட்பாளனாக நின்று தோல்வியுற்றேன்.

ஆகவே வாழ்க்கையில் வெற்றியையும் தோல்வியையும் சம நோக்குடன் பார்க்கப் பழகியவன் நான்!

சாப்பாட்டு வேளை வருகிறது. காரியாலய வேலையும் இருக்கிறது. இன்னும் பார்த்துப் பேச வேண்டிய நண்பர்களும் காத்திருக்கிறார்கள். ஆகவே வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு வரும் நேரத்தை வீணடிக்க விரும்பவில்லை. பக்கத்து ஹோட்டலிலிருந்து சாப்பாடு வரவழைக்க ஏற்பாடு செய்கிறேன். பெரும்பாலும் நான் சைவ உணவைத்தான் விரும்புகிறேன். இந்த வழக்கத்துக்குச் சில சமயங்களில் விதிவிலக்கு அளிக்கிறேன்.

இலையில் சாப்பாட்டை வைத்துக் கொண்டவுடன், எனக்கு மீண்டும் தலைவர் காமராஜின் நினைவு வந்து விடுகிறது. தினமும் அவர் சாப்பிடும் நேரத்தில் கூட இருப்பேன்! ஏதாவது பிரச்னைகளைப் பற்றிப் பேசிக் கொண்டே அவர் சாப்பிடுவார்.

என்மேல் அவருக்குத்தான் எத்தனை அன்பு என்று இப்போது நினைத்துப் பார்க்கிறேன்.... 1954ல் அவர் மலேஷியா செல்ல ஏற்பாடாகி யிருந்தது. என்னைக் கூட அழைத்துப் போக எண்ணி யிருந்தார். கன்யாகுமரியிலிருந்து சென்னைக்குத் தந்தியடித்து என்னுடைய பாஸ்போர்ட் விஸாவுக்கு ஏற்பாடுகள் செய்திருக்கிறார். இதெல்லாம் எனக்கு அப்புறம்தான் தெரியும்.

சாப்பிட்டுவிட்டு நான்கு மணி வரை வந்திருக்கும் கடிதங்களைப் பார்க்கிறேன். நான்கு மணிக்கு ஒரு கப் டீ. மீண்டும் தொண்டர்கள், நண்பர்கள் சந்திப்பு.

இன்று பொதுக்கூட்ட நிகழ்ச்சி ஒன்றுமில்லை. தடை உத்தரவு அமுலில் இருக்கும் நேரமல்லவா?

எட்டு மணி சுமாருக்கு வீட்டுக்குக் கிளம்புகிறேன். இலேசான ஆகாரம், மாலைப் பத்திரிகைகள் காத்திருக்கின்றன.

பத்து மணி அடித்த பிறகு படுக்கப் போகிறேன். தொண்டர்களின் முகங்கள் விழிப்பும் உறக்கமும் கலந்த நேரத்தில் தோன்றித் தோன்றி மறைகின்றன.

கேட்டு எழுதியவர்: **கோமதிஸ்வாமிநாதன்**









### ஸ்ரீ காமகோடி காமாக்ஷி

காரணபர சித்ரூபா காஞ்சீபுரஸீம்னி காமபீட கதா
காசன விஹராதி கருணா காச்மீரஸ்தபக கோமலாங்க லதா ||

கஞ்சன காஞ்சி நிலயம் கரத்ருத கோதண்டபாண ஸ்ருணிபாசம்
கடின ஸ்தனபர நம்ரம் கைவல்யானந்த கந்தம வலம்பே ||

காம பரிபந்தி காமினி, காமேச்வரி காமபீட மத்யகதே
காமதுகா பவ கமலே காமகலே காமகோடி காமாக்ஷி ||

ஸ்ரீயே புரஹர ஜாயே, மாயே நவதருண பல்லவச்சாயே
சரணே சந்த்ராபரணே காஞ்சி சரணே நதார்த்தி
ஸம்ஹரணே ||

ஜயஜய ஜகதம்ப சிவே ! ஜயஜய காமாக்ஷி ! ஜயஜய ஜயாத்ரி ஸுதே
ஜயஜய மஹேச தயிதே ஜயஜய சித்ககன கௌமுதீ தாரே ||

# ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்மன் ஆலய மகா கும்பாபிஷேகம்

பாரதத்தின் புனித ஸ்தலங்கள் ஏழில் ஒன்றும், சைவ, வைணவ, சாக்தர் அனைவருக்கும் பொதுவான புண்ணிய க்ஷேத்ரமுமான காஞ்சீபுரம் மிகவும் பிரசித்திபெற்ற நகரம். அந்நகரில் உள்ள மிகப் புராதன ஆலயங்கள் அனைத்திலும் மிகப் பழைய பிரசித்திபெற்ற ஆலயம் காமாக்ஷி அம்மன் ஆலயம். அப்புனித ஆலயத்தில் ஆதிசங்கரர் சன்னதிக்கெதிரில் ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டை செய்து மேலும் இத்தலத்தின் மகிமையைப் பெருக்கினார். இவ்வாலயத்தின் புனருத்தாரணம் காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் அநுக்ரகத்தினால் மேற்கொள்ளப்பட்டும், அன்னையின் அருளினால் பூர்த்திபெறும் நிலையில் உள்ளது. மகா கும்பாபிஷேகம் 5-4-76 அன்று நடைபெற இருக்கிறது. அன்று காலை ஆறு மணியிலிருந்து ஆறரை மணிக்குள்ளாக காமகோடி பீடம் ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகளால் கும்பாபிஷேகம் நடத்தி வைக்கப்படும்.

இந்த மகா கும்பாபிஷேக வைபவத்தில் பங்கு கொள்வதும் அன்னை காமாட்சியம்மனின் பரிபூரண அநுக்ரகத்துக்குப் பாத்திரராவதும் கிடைத்தற்கரிய பாக்கியமாகும்.

மகா கும்பாபிஷேக வைபவத்துக்குத் தங்களால் ஆன நிதியை அனுப்ப வேண்டிய விலாசம் :

பொருளாளர்,

**ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்மன் ஆலயப் புனருத்தாரணக் கமிட்டி,**
**காஞ்சிபுரம், தமிழ்நாடு**

# ஸ்ரீ ஷண்முகானந்த சங்கீத சபா (ரிஜிஸ்டர்டு)

## புது தில்லி

# வெள்ளி விழா 1976

**(சங்கீதப் பள்ளியின் உதவிக்காக)**

**'ராபிமார்க்கி'லுள்ள 'மாவ்லங்கர்' அரங்கத்தில்**

✻

*நிகழ்ச்சி நிரல்*

| | மாலை | |
|---|---|---|
| 7-4-76 | 6 மணி | துவக்க விழா<br>ஸ்ரீமதி சித்ரா விஸ்வேஸ்வரன்-பரதநாட்டியம் |
| 8-4-76 | 6 மணி | ஸ்ரீமதி M. S. சுப்புலக்ஷ்மி & பார்ட்டி – பாட்டு |
| 9-4-76 | 5-30 மணி | மதுரை ஸ்ரீ S. சோமசுந்தரம் & பார்ட்டி - பாட்டு |
| 10-4-76 | 3-30 மணி | ஸ்ரீ N. ரமணி & பார்ட்டி -புல்லாங்குழல் |
| | 6-30 மணி | டாக்டர் M. பாலமுரளி கிருஷ்ணா & பார்ட்டி - பாட்டு |
| 11-4-76 | 3-30 மணி | ஸ்ரீ சிட்டி பாபு - வீணை |
| | 6-30 மணி | மகாராஜபுரம் ஸ்ரீ சந்தானம் & பார்ட்டி- பாட்டு |
| 12-4-76 | 6 மணி | குமாரி ஸ்ரீ வித்யா -பரதநாட்டியம்<br>(பதம்: ஸ்ரீமதி M. L. வசந்தகுமாரி) |
| 14-4-76 | 6 மணி | குமாரி பத்மா சுப்பிரமணியம் -பரதநாட்டியம் |

*சீசன்:* **ரூ. 75/- ரூ. 50/- ரூ. 35/- ரூ. 20/-**

✻

*விசாரணைகள்:*

**Hon. Genl. Secretaries**


போன்: 310340/625731
C-320, டிபன்ஸ் காலனி
புது தில்லி - 24

போன்: 618741
A-20/33, லோடி காலனி
புது தில்லி - 3

# சேரமான் காதலி

கண்ணதாசன்

## அத்தியாயம் 24

## ஞானப் புலம்பல்

ஸ்ரீரங்கத்திலிருந்து புறப்பட்ட குலசேகர ஆழ்வார் உறையூரைக் கடந்து விறலி மலை வழியாகச் செல்லும்படி முதலில் சென்ற குதிரை வீரனுக்குக் கட்டளையிட்டார். வழி நெடுகிலும் அவர் நிம்மதியற்றவராகவே இருந்தார்.

'விறலிமலை வழியாகச் செல்' என்று அவர் ஆணையிட்ட உடனேயே, அவர் பாண்டி நாட்டுக்குத்தான் செல்ல விரும்புகிறார்





என்பதனைச் சிடகோடிகளும் பரிவாரங்களும் தெரிந்து கொண்டன.

முன்பு அவர் கூறியிருந்தபடி திருமலைக்குச் செல்வதானால், ஸ்ரீரங்கத்திலிருந்து வடக்கு நோக்கித்தான் செல்ல வேண்டும். திருமலைக்குச் செல்லாமல் பாண்டி நாடு நோக்கிச் செல்வதன் பொருள் என்ன? யாருக்கும் அதன் பொருள் விளங்கவில்லை. யாரிடமும் எதையும் சொல்லக்கூடிய நிலையிலும் அவர் இல்லை.

உடல் பல்லக்கில் இருந்ததே தவிர, உள்ளம் சேர நாட்டிலேயே இருந்தது.

தமது வம்சம் அழியப் போவதுபோலவும், மார்த்தாண்டவர்மன் கொல்லப்படுவது போலவும் அவருக்குத் தோன்றின.

ரத்தம் வெகு வேகமாக விளையாடத் தொடங்கியது. ஞானத்தின் பக்குவம் முழுவதும் அடிபட்டுப் போயிற்று. இடையிலே அவர் தண்ணீர்கூட அருந்தவில்லை. பல்லக்கை நிறுத்தும்படி எங்கும் கேட்கவில்லை. வெறும் சடலம் போலவே வீற்றிருந்தார்.

விறலிமலை எல்லைக்குள் அவர் நுழைந்தபோதுதான் அங்கே திருவிழா நடந்து கொண்டிருந்தது அவருக்குத் தெரிந்தது.

விறலிமலைக் கோயில் புதுப்பிக்கப்பட்டுக் குடமுழுக்கு விழா கோலாகலமாகக் கொண்டாடப்பட்டுக் கொண்டிருந்தது. கூட்டத்தை விலக்கிக்

கொண்டு கையில் இருந்த சலங்கை கட்டிய வேல் கம்பைத் தட்டிக்கொண்டு ஏராளமான பரிவாரங்கள் வருவதை யும், நடுவில் ஓர் அழகான பல்லக்கு வருவதையும் கண்ட விறலிமலை பக்த கோடிகள், யாரோ ஒரு ராஜயோகி வருகிறார் என்பதை மட்டும் கண்டு கொண்டார்கள்.

'யார் அவர்? யார் அவர்?' என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண் டார்கள்.

ஆவல் தாள முடியாமல் பரி வாரங்களில் ஒருவரிடம் ஒரு முதியவர் ''யாரப்பா அது?'' என்று கேட்டுவிட் டார். அவனும் நடந்தபடியே, ''ஸ்ரீலஸ்ரீ சேரமான் பெருமாள் குலசேகர ஆழ் வார்'' என்றான்.

உடனே, ''சேரமான் பெருமாள், சேரமான் பெருமாள்'' என்று சிலரும், ''குலசேகர ஆழ்வார் குலசேகர ஆழ் வார்'' என்று பலரும் பேசினர்.

இரண்டொருவர் வெகு வேகமாக மலையின் மீது ஏறி அங்கு முருகனுக்குச் சாத்துபடிகளைக் கவனித்துக் கொண் டிருந்த சரவணப் பெருமாள் நாயகரை யும், வாண கோவரையரையும் அழைத் துக் கொண்டு ஓடி வந்தார்கள்.

இருவரும் பட்டுத் துண்டை இடுப் பிலே கட்டிக் கொண்டு கோவில் எதிரி லேயே குலசேகர ஆழ்வாரை வழி மறித்தார்கள். கீழே விழுந்து கும்பிட் டார்கள். பல்லக்கிலிருந்து வெளியே எட்டிப் பார்த்த குல சேகர ஆழ்வாருக்கு அது ஓர் இடையூறாகவே தோன்றிற்று.

சாதாரண காலங்களில் தனி யொரு அடியவரைக் கண்டா லும், தம் நிலை மறந்து பேசிக் கொண்டிருக்கும் குலசேகர ஆழ் வார் அப்போது கொஞ்சம் சங் கடப்பட்டவர் போல் காணப் பட்டார்.

பரிவாரங்களை விலக்கிக் கொண்டு பல்லக்கை நெருங்கிய சரவணப் பெருமாளும், வாணகோவரையரும் ஆழ்வாரிடம் கை நீட்டினார்கள். இருவ ருக்கும் அவர் திருநீறு கொடுத்தார். ஆனால் அவர்கள் அவரை விடவில்லை.

''சுவாமி! கொஞ்சம் மலைக்கு வந்து ஏழை எளிய அடியவர்களுக்கு நான்கு வார்த்தை உபதேசித்துவிட்டுப் போக வேண்டும்'' என்று கேட்டுக் கொண் டார் வாணகோவரையர்.

''நான் அவசரமாகத் திருவில் லிப் புத்தூருக்குச் சென்று கொண்டிருக்கிறேன். என்னை இடைமறிக்காதீர்கள்'' என்றார் குலசேகர ஆழ்வார்.

''நாங்கள் எதிர்பாராதவண் ணம் விறலிமலை முருகன்தான் தங்களை இங்கு அழைத்து வந்தி ருக்கிறான். இனி நாங்கள் உங்களை எப்போது தரிசிக்கப் போகிறோம்?



இரண்டொரு நாழிகைகள் எங்களோடு தங்கி விடைபெறலாகாதா?'' என்று கெஞ்சினார் சரவணப் பெருமாள்.

முகத்தைச் சுழித்தபடியே பல்லக் கைக் கீழே வைக்கச் சொன்னார் குலசேகர ஆழ்வார்.

நிம்மதியற்ற நிலையில் ஒருவன் என்ன உபதேசிக்க முடியும்? கனவுலகில் நடப்பதுபோல் அவர் மலையின் மீது நடந்தார். விறலிமலை முருகனைத் தரிசித்தார். அந்த முருகனின் முன்னிலையில் தான் சோழ நாட்டுத் தேவதாசிகள் பொட்டுக் கட்டித் தங்களை அர்ப்பணித்துக் கொள்வது வழக்கம். அதனாலேயே அந்த மலைக்கு விறலிமலை என்ற பெயரும் வந்தது. தேவனுக்கு அடியவராகப் பெண்களே தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் அந்தச் சந்நிதானத்தில் தன்நினைவற்றவர் போல் நின்றார் குலசேகர ஆழ்வார். அது மெய்மறந்த நிலையுமல்ல; பக்தி நிலையுமல்ல.

'கையிலே வேல் கொண்டு நிற்கின்ற முருகா! இந்த வேலோடு நீ வஞ்சி நகருக்குச் செல்லக் கூடாதா?' என்று வேண்டுகோள் விடுக்கின்ற நிலையே அது.

சந்நிதானத்து முன் மண்டபத்துக்கு அவர் திரும்பி வந்தபோது அங்கே ரத்தினக் கம்பளம் விரித்து ஆடுவதற்கு இரண்டு தாசிப் பெண்கள் நின்றிருந்தார்கள். அதைப் பார்த்ததும் ஆட்டம் பார்க்கவும் ஆசை தோன்றவில்லை, ஆழ்வாருக்கு. ''இதிலே எவ்வளவு நேரம் போகுமோ?'' என்ற கவலையே தோன்றிற்று.

அவர்கள் பாடிக் கொண்டு ஆடியது விரக தாபம் மிகுந்த ஒரு பதம்.

திருக்கோவில்களில் விரக தாப பாவம் என்பது பக்தி ரஸத்தின் உணர்ச்சிமயமான பாவம்.

பக்தி நிலை — காதல் நிலை இரண்டும் தான் மெய்மறந்த நிலைகள். முற்றி முதிர்ந்த பக்தி நிலைக்குக் காதல் நிலையின் சாயல் உண்டு. அது உடல் வழிக் காமம் அன்று; மன வழி உணர்வே. இறைவன் தன்னிடமே ஐக்கியமாக வேண்டும் என்று ஒருத்தி விரும்புகிற விருப்பமே அங்கே விரக தாபம். கணவன் தனக்கே உரியவனாக இருக்க வேண்டும் என்று விரும்புவது போல், இறைவனும் தனக்கே உரியவனாக இருக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்வதே அந்த விரக தாபத்தின் நோக்கம்.

சுற்றுச் சூழ்நிலைகளிலும் தேவதாசிகளின் நாட்டியத்திலும் கவலையைக் கொஞ்சம் மறந்திருந்தார் குலசேகர ஆழ்வார்.

நாட்டியம் முடிந்ததும் அவர் பேசத் தொடங்கினார்.

''இறைவனோடு ஐக்கியமாகும் பரிபூரண நிலையைத் தாசிப் பெண்களும் விரும்புகிறார்கள். அடியார்களையும், ஞானிகளையும்விட இவர்கள் அதிர்ஷ்டக்காரர்கள். பருவம் வந்த காலத்தில் இருந்தே தங்களுக்கென்று ஒரு சுகம் அவர்களுக்குத் தேவைப்படுவதில்லை. எல்லோரிடத்தும் இறைவனைக் கண்டு அதிலே திருப்தி அடைந்து வருகிறார்கள். ஆனால் அடியவர்களும், ஞானிகளும் இறைவனைத் தேடி எங்கெங்கோ அலைகிறார்கள். கடை நிலையில் இருப்பவர்களுடைய நிம்மதி, உயர் நிலையில் இருப்பவர்களுக்கு வருவதில்லை. சொல்லப் போனால் அவர்களுடைய பக்குவம்கூட இவர்களுக்கு வாய்ப்பதில்லை. உடல் நோய் கொண்டவனுக்கு உடல் நோயைவிட, மன நோயே பரவாயில்லை என்று தோன்றுகிறது. மன நோய் கொண்டவனுக்கோ உடல் நோயே பரவாயில்லை என்று தோன்றுகிறது. இங்கே ஆடியவர்கள் மனநோய் இல்லாதவர்கள்; ஆகவே இன்றையக் கவலை இல்லை. உடல்நோயை எதிர்பார்த்தே வாழ்கிறார்கள்; அதனால் அன்றையக் கவலையும் இல்லை. ஏதும் அறியாத இவர்களுக்கு இரண்டு கட்டத்தையும் கடந்த பக்குவம் இருக்கிறது. எனக்கும் அந்தப் பக்குவம் இருந்தால் இன்னும் கொஞ்ச நேரம் உங்களோடு பேசிக் கொண்டிருக்க முடியும்.

எனக்கு அந்தப் பக்குவம் இல்லை.

மீனுக்கு நதியே சுடுகாடாகிவிட்டால் அதற்கு வேறு போக்கிடம் ஏது?

எல்லாம் வல்ல முருகன் உங்களைக் காக்கட்டும்.''

— குலசேகர ஆழ்வார் நடக்கத் தொடங்கினார். அவரால் நடக்க முடியவில்லை. அவ்வளவு பெண்களும், குழந்தைகளும் அவர் காலடியில்.

அவர் மீண்டும் மனிதரானார்.

அவர் கண்களில் இருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது.

'உலகம் நம்மை வணங்குகிறது. ஒரே ஒருவன் மட்டும் நம்மைச் சித்திரவதை செய்கிறானே' என்று எண்ணிய போது, அவருக்கும் உபதேசம் தேவைப்படுவது போல் தோன்றிற்று.

பல்லக்கு விடைபெற்றுக் கொண்ட போது, விறலிமலை மக்களின் அத்தனை கரங்களும் மேல்நோக்கி உயர்ந்தன.

அதிகாலை நேரத்தில் ஆழ்வாரும், பரிவாரங்களும் மதுரை நகருக்குள்ளே

---



அமெரிக்காவிலுள்ள ஒரு வருமான வரி அலுவலகத்தில் இப்படி ஒரு போர்டு இருக்கிறது: ''அலுவலகம் இன்று உண்டு: திறந்திருக்கும்; மன்னிக்கவும்.''

— ஸண்டே டைம்ஸ்—முத்து

உங்களுக்கு விருப்பமான ப்ரூ
இப்பொழுது குறைந்த விலைக்கு



நுழைந்தபோது அந்த நேரத்திலேயே மதுரை கருகருப்பாக இருப்பது போல் காணப்பட்டது.

முன்கூட்டியே சீடர்களுக்கும், பரிவாரங்களுக்கும் எச்சரித்தபடி அவர்கள் யாரும் வந்துகொண்டிருப்பது குலசேகர ஆழ்வார்தான் என்று மதுரை மக்களுக்குச் சொல்லவில்லை.

மதுரை நகரில் ஏராளமான குதிரை வீரர்களும் காலாட்படைகளும் திரண்டு கொண்டிருந்தன. அந்த வீரர்களுக்குள்ளே புகுந்த ஆழ்வாரின் சீடன் ஒருவன் விவரங்களைத் தெரிந்து கொண்டான். ஆம்; அப்போதுதான் அந்தப் படைகள் சேர நாட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தன.

ஆழ்வார் பெருமூச்சோடு அந்த இடியையும் தாங்கிக் கொண்டார்.

சென்ற தடவை அவர் திருவில்லிப் புத்தூருக்குச் சென்றபோது, எந்த நான்மாடக் கூடல் அவரை மேளதாளங்களோடு வரவேற்றதோ, அதே கூடல் நகரம் தன் மகனது கொலைக்களம்போல் அவருக்குத் தோன்றிற்று.

இப்போது ரவிவர்மனின் திட்டங்களெல்லாம் அவருக்குக் கற்பனையிலேயே புரியத் தொடங்கின.

'சேர நாட்டின் சரித்திரத்தில் மன்னர்கள் கண்ணீர் வடித்த பக்கங்கள் மிகவும் குறைவு. மார்த்தாண்டவர்மன்தான் அதைக் கண்ணீரால் நனைக்கப் போகிறான்' என்று எண்ணியபோது, அவரது கண்ணீர் பல்லக்கை நனைத்தது.

அப்போது அவர் மன்னருமல்ல; ஆழ்வாருமல்ல; ஒரு தந்தை.

ஸ்ரீரங்கத்தில் புறப்பட்டதிலிருந்து ஆழ்வார் தண்ணீர்கூட அருந்தாமல் உபவாசம் இருந்தார். இடைஇடையே உணவு உண்ணும்படி பரிவாரங்களை மட்டும் கேட்டுக் கொண்டார்.

ஆழ்வாரின் உபவாசத்துக்கு அர்த்தம் புரியாத சீடர்கள், 'இன்று என்ன கிழமை?' என்று கேட்டுக் கொண்டார்களே தவிர, 'என்ன நடந்தது' என்று கேட்டுக் கொள்ளவில்லை.

அவரும், சீடர்களும், பரிவாரங்களும் திருவில்லிப்புத்தூருக்குள் நுழைந்தபோது, திருவில்லிப்புத்தூரும் அவர்களை எதிர்பார்க்கவில்லை.

அவர்கள் பெரியாழ்வார் வீட்டை நெருங்கியபோது வீட்டினுள்ளே பெரியாழ்வார் தம் மகளுக்குக் கீதோபதேசம் செய்து கொண்டிருந்தார்.

குதிரைகளின் குளம்படி ஓசை அவர்களைக் கலைக்கவில்லை.

**விஷமம்**



அந்த நான்கு புத்தகங்களும் ரஷ்யாவைச் சேர்ந்த புகழ்மிக்க எழுத்தாளர்களால் எழுதப்பட்டவை. அப்புத்தகங்களைப் படிக்கவோ, அல்லது விற்கவோ ரஷ்யாவில் தடை எதுவுமில்லை. இருந்தபோதிலும் அவற்றை விற்பனை செய்ததற்காக மாஸ்கோவிலுள்ள ஒரு கடைக்காரர் சிறையில் அடைக்கப்பட்டார்.

காரணம்? அப்புத்தகங்களைத் தலைப்புவாரியாக வரிசைப்படுத்தி வைத்திருந்த முறைதான். அவர் அடுக்கி வைத்திருந்த விதம்—புத்தகப் பெயர்கள் முறையே :

1. மாஸ்கோவுக்கு வெளியே வெகு தொலைவில்...
2. பல மாடிக் கட்டிடங்களின் நிழலில்...
3. அயல்நாட்டுக் கொடியின் கீழ்...
4. நாங்கள் வாழ விரும்புகிறோம்.

—ஆதாரம் : தமிழம்

அனுப்பியவர்: க. மு. நெயினு முகம்மது

---

குலசேகர ஆழ்வாரும், பரிவாரங்களும் வெளியே அப்படியே அசையாமல் நின்றனர்.

பெரியாழ்வார் சொன்னார் :

''கங்கைக் கரையில் நிற்பவன் கிணறு தேடி அலைய வேண்டியதில்லை.

யஸ்த் - வாத்மரதி - ரேவஸ்யா - தாத்மத்ருப்தச்ச மானவ: |
ஆத்மன்யேவ ஸந்துஷ்டஸ் - தஸ்ய கார்யம் ந வித்யதே ||

அதனால் எந்த மனிதன் ஆன்மாவிலேயே இன்புற்றவனாக, ஆன்மாவிலேயே திருப்தியுற்றவனாக, ஆன்மாவிலேயே சந்தோஷத்தைப் பெற்றவனாக உள்ளவனோ அவன் செய்ய வேண்டிய கர்மம் ஒன்றும் இல்லை.

லௌகிகத்தில் இருந்துகொண்டே ஆத்ம ஞானத்தைப் பெற முடியும். உதாரணம் : ஜனக மகாராஜா.

இந்த வகையில் மானிட சரித்திரம் முழுவதற்கும் ஜனகன் ஒருவனே உதாரணமாகத் திகழுகிறான். நீ உலகில் இருந்துகொண்டே ஜனகனைப் போல் வாழ்வதாக ஏமாந்துவிடாதே ! அந்த ஞானம் அரிதினும் அரிது.''

— இதுதான் முடிவுரை போல் பெரியாழ்வார் ஒரு பாசுரத்தைப் பாடினார். அதைப் பாடி முடித்ததும் குலசேகர ஆழ்வார் உள்ளே நுழைந்தார். அவரைப் பார்த்ததும் பெரியாழ்வார் திகைத்தார்.

குலசேகர ஆழ்வார் ஒன்றும் பேசவில்லை. மாறாகப் பெரியாழ்வாரின் கால்களில் விழுந்து தேம்பித் தேம்பி அழுதார்.

(தொடரும்)

ரூ.125/-மிச்சம்
பிடியுங்கள்

ஒவ்வொரு

எச்எம்வி **டிஸ்கோ:ஃபோன்**

வாங்கும்போதும்

**1 LP இலவசம்**

மற்றும்
அடுத்து வாங்கும்
5LP ரிகார்டுகளுக்கும்
கணிசமான
தள்ளுபடி உண்டு.



GC-8621

எச்எம்வி **ஃபியஸ்டா**

டிரான்ஸ் மெயின்ஸ்

வாங்கும்போதும்



**2 LP இலவசம்**

மற்றும்
அடுத்து வாங்கும்
10LP ரிகார்டுகளுக்கும் கணிசமான
தள்ளுபடி உண்டு.

உங்கள் எச்எம்வி
டீலரை கேளுங்கள்.

**ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்**

ஒலிமயமான எதிர்காலம்




இந்த தள்ளுபடி குறுகிய காலத்துக்கு மட்டுமே.

# எண்திசை விளங்க எட்டு லக்ஷ்மிகள்



மஹாலக்ஷ்மி மூலவர் சிலை

‘இதென்ன? நாம் கனவிலும் எண்ணிப் பார்க்க முடியாத மகா பெரிய காரியத்தைப் பெரியவாள் நமக்கு இட்டுவிட்டாரே’ என்று மலைத்து நடுங்கினார் ஸ்ரீ முக்கூர் ஸ்ரீநிவாஸ வரதாச்சாரியார், மூன்றாண்டுகளுக்குமுன். எவரும் பிரமிக்கிற காரியம்தான். ஸ்ரீ காஞ்சி பெரியவாள் இவரை நோக்கி அநாயாசமாக, ‘‘அஷ்ட லக்ஷ்மிகளுக்கும் சென்னையில் ஒரு கோயில் கட்டு. அதுவும் யாசகம் செய்யாமல் கட்ட வேண்டும்’’ என்று ஆக்ஞாபித்து விட்டார்கள் !

பெரியவாள் தீர்மானமாகப் பணித்து விட்டதால் ஏதோ ஒரு விதத்தில் வேலை தொடங்கத்தான் வேண்டும் எனக் கருதிய முக்கூர் அஷ்ட லக்ஷ்மிகளையும் பெரிய அளவில் சித்திரமாக எழுதி அதன் விற்பனையின் மூலம் நிதி திரட்ட முற்பட்டார். மொத்தம் அறுபதினாயிரம் ரூபாய் செலவில் ஒரு சிறு ஆலயம் எழுப்புவதுதான் அன்று அவரது உத்தேசம்.

பக்தர் தருகிற கட்டணத்துக்குப் பிரதியாக ஓவியத்தை விற்பதால் இதை யாசகம் என்று கூற முடியாதல்லவா ? இந்த் யோசனையைப் பெரியவாளும் ஆசீர்வதித்து.. அஷ்டலக்ஷ்மி ஸ்தோத்திரத்தில் காரிய ஸித்தியை அருளும் ஸித்தி லக்ஷ்மி பதினொன்றாவதாக வருவதால் ஓவியத்துக்குப் பதினோரு ரூபாய் விலை வைக்கச் சொன்னார்களாம்.

ஓவியமும் பிய்த்துக் கொண்டு போயிற்று. ஆனாலும் படங்கள் யாவும் விற்பனையாகும் வரையில் காத்துக் கொண்டிருப்பதற்கு அவசியம் இல்லாமல், சற்றும் எதிர்பாராத விதத்தில் ஹைதராபாத் ஸ்டேட் பாங்கு கடன் வசதி அளிக்க முன் வந்தது. அதிலிருந்து பெரியவாளின் சங்கல்பம் செய்துள்ள சாதனைகள் பலப் பல என்கிறார் முக்கூர்.

கடற்கரையில் அமைந்துள்ள ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஆலயத்தின் எழில்மிகு தோற்றம்



கடற்கரையில்தான் இவ்வாலயம் அமைய வேண்டும் என்று பெரியவாள் விரும்பியபடியே, பெஸண்ட் நகர் கோடியில் திருவான்மியூருக்கு அடுத்த ஓடக் குப்பத்தில் ஸ்ரீ வி.எம். ராகவலு நாயுடு சகாயமான விலைக்கு மனை கொடுத்தார். ஓடக் குப்பம் ‘‘ஓம்கார க்ஷேத்திரம்’’ என்ற உத்தமமான புதுப் பெயர் பெற்றது.

அஷ்டாங்க விமானமாக ஆலயத்தை அமைக்க வேண்டும் என்றார் ஆசாரியர் பெருமான். கோஷ்டிபுரம் எனும் திருக்கோட்டியூர், மதுரை கூடலழகர் கோயில், உத்திரமேரூர் ஆகிய மூன்று வைணவ க்ஷேத்திரங்களிலேயே இதுகாறும் அஷ்டாங்க விமானம் உள்ளது. இதன் முக்கியமான அம்சம் — கர்ப்பக்ருஹம் மூன்று அடுக்குகளாக அமைந்து இருப்பதாகும்.

ஏதோ ஒரு சந்நிதி என்று எழுப்பி அதில் எட்டு லக்ஷ்மிகளையும் பிரதிஷ்டை செய்வது என்றில்லாமல், மூன்றடுக்கு கட்டுவது என்றால், 60,000 ரூபாய் எப்படிப் போதும் ? இப்படி எண்ணி ஸ்ரீ முக்கூரை அதிகம் அலமாப்புற வைக்காமல், பெரியவாளின் அருட் புயல் கோவைத் தொழில் அதிபரும், தர்ம சீலருமான ஸ்ரீ ஜி. கே. தேவராஜுலு அவர்களைப் புரட்டி வந்து திருமகளின் திருப்பணியில் ஆழ ஈடுபடுத்



ஜி. கே. தேவராஜுலு

தியது. அவரது சகா ஸ்ரீ ராஜேந்திரன் நாயுடு இந்த நற்பணியில் முக்கியமான பங்கு பற்றினார். ஜி. கே. டி. தாம் ஒருவரே, முதலில் உத்தேசித்திருந்ததற்குப் பத்து மடங்கு பொருளை அதாவது ஆறு லட்சம் ரூபாய்களை அள்ளிக் கொடுக்க முன் வந்தார். பிற்பாடோ, அவர் இதற்கு அதிகமாகவும் உதவி புரிந்து இன்று இவ்வாலயத்துக்கு ஏழு லட்சம் ரூபாய்க்கும் அதிகமாகவே வழங்கியிருக்கிறார். கும்பாபிஷேகத்துக்காக ஒரு லட்சம் ரூபாய் வாக்குறுதி தந்திருக்கிறார். சகல சுபிட்சங்களும் நல்கும் திவ்வியத் திருப்பணியில் பெரியவாள் அருளால் அதி முக்கியமான பங்கைப் பெற்றுள்ள ஜி. கே. டி. அவர்கள் பரம பாக்கியசாலி; நம் அனைவரின் நிறைந்த அன்புக்கும் பாத்திரமானவர்.

வேறு பல அன்பர்கள் அளித்த திரவிய காணிக்கைகளை மற்ற சுற்றுப் பணிகளுக்கு உபயோகப்படுத்தியிருக்கிறது. உதாரணமாக ஸ்ரீ வி. எல். பாலகிருஷ்ண நாயுடுவும், ஸ்ரீ துரைசாமி நாயுடுவும் அளித்த ரூ.50,000ல் சங்க நிதி பத்ம நிதி சந்நிதிகள் எழும்பியுள்ளன. ராஜகோபுரம் முதலானவற்றை எழுப்பப் பல தார்மிகப் பிரபுக்கள் தாராளமாக நிதியம் வாக்களித்துள்ளனர். (யாசகம் என்று தேடிப் போகாமல்!)

இலக்குமியர் எண்மரும் இலங்கும் அந்த எழிலார்ந்த அஷ்டாங்க விமானத்தைப் பார்ப்போம். அடித் தளத்தே மஹாலக்ஷ்மி மைய மூர்த்தியாகக் கிழக்குப் பார்த்துத் தரிசனம் சாதிக்கிறாள். 'லக்ஷ்மீ தந்த்ர'ப்படி அவளுடைய நாயகனும் திருமாலும் உடன் நிற்கிறார். தெற்குப் பார்த்து ஆதி லக்ஷ்மியும், மேற்கு முகமாய் தான்ய லக்ஷ்மியும், வடபால் தைரிய லக்ஷ்மியும் குடிகொள்வர். பெருநலன்களைக் குறிக்கும் பதினெட்டுப் படிகள் ஏறி இரண்டாம் தளத்தை அடைந்தால் கிழக்கு நோக்கி கஜலக்ஷ்மியும், தெற்காக சந்தான லக்ஷ்மியும், மேற்காக விஜயலக்ஷ்மியும், வடக்காக வித்யா லக்ஷ்மியும் திருக்கோலம் சாதிப்பார்கள். பின்னும் பதினெட்டுப் படி ஏறி மூன்றாம் தளம் அடைந்தால், அங்கு உலக வாழ்க்கைக்கு அதி முக்கியமான தனலக்ஷ்மி தனியொருத்தியாகத் தரிசனம் தருவாள்.

திருக்கோட்டியூரில் உள்ளது போலவே விமானமூர்த்தியாக மூன்று பக்கங்களில் மேற்கே நாராயணன், வடக்கே பிரம்மா, தெற்கே தக்ஷிணாமூர்த்தி என்று திரிமூர்த்தியரும், கிழக்கே லக்ஷ்மியும் காட்சி அளிப்பர்.

மும்மூர்த்தியர் போலவே மும்மதாசாரியர்களும் விமானத்தில் இடம் பெறுவது மற்றொரு பொருள் பொதிந்த புதிய ஏற்பாடு ஆகும். கிழக்கு நோக்கிப் பாற்கடல் கடைந்து லக்ஷ்மி உற்பவம், லக்ஷ்மீ கல்யாணம், வைகுண்டக் காட்சி இவை சிற்பமாக விளங்கும். மற்ற மூன்று திக்குகளில் சங்கரர், ராமானுஜர், மத்வர் ஆகியோர் ஒவ்வொருவரும் நாலு சீடர்களுடனும் அமர்ந்து, இங்கு வருவோருக்கெல்லாம் அநுக்கிரகம் புரியப் போகிறார்கள்.

இரண்டாம் தளத்தின் மேல் தசாவதாரங்களும் சிற்ப உருக் கொண்டுள்ளன. மூன்றாவது அடுக்கில், ஸ்ரீ ஆதிசங்கரர் ''கனகதாரா ஸ்தவம்'' கூறித் திருமகளைப் பொன் மழை பொழியச் செய்தது ஒரு புறமும், எதிர்ப்புறம் ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் ''ஸ்ரீ ஸ்துதி'' கூறி அதே செந்திருவைச் சொன்னமாரி சொரிய வைத்ததும் சிற்பங்களாகியுள்ளன.

கோயில் நிர்மாணித்த பிரதான சிற்பி ஸ்ரீ தேவலிங்கம்; அஷ்டலக்ஷ்மி விக்கிரஹங்களைச் செய்த ஸ்தபதி ஸ்ரீ நீலமேகம் — இருவருக்கும் நம் நன்றி உரித்தானது.

கட்டுவித்த மகான் காஞ்சி மகாமுனிவருக்கு சதாபிஷேகக் காணிக்கையாக இதை அளிப்பது போல் விமானத்தைச் சரியாக எண்பத்தியொரு அடி உயரமுள்ளதாக எழுப்பியுள்ளனர்.

நூதன மகாக்ஷேத்திரமாக உற்பவித்துள்ள இவ்வாலயத்தின் மஹா கும்பாபிஷேகம், பொன்னைப் பொழிந்த காமகோடீச்வரியான ஸ்ரீ காஞ்சி காமாக்ஷியின் குடமுழுக்கு நடைபெறும் அதே ஏப்ரில் 5ந் தேதி திங்கட்கிழமையன்று நிகழ்கிறது. பாஞ்சராத்ர ஆகமப்படி சீரும் சிறப்புமாக இப்பெரு வைபவத்தை நடத்த ஸ்ரீ ஜி. கே. டி.யின் தலைமையில் ஸ்ரீ கோத்தாரி, ஏ. எம். எம். அருணாசலம், ஆர். வேங்கடராமன், வி. ஆர். பட்டாபிராமன், ஏவி. மெய்யப்பன், மிலாப்சந்த் தாதா, ஹிந்து ஜி. கஸ்தூரி, டி. டி. நரசிம்மன், எம்பெருமானார் செட்டி, அனந்தசயனம் ஐயங்கார் ஆகிய பெருமக்கள் குழுவாக அமைந்து ஏற்பாடு செய்து வருகிறார்கள். பரம பூஜ்யர்களான அஹோபில மடம் ஜீயர் ஸ்ரீ அழகிய சிங்கர் ஸ்வாமிகள் கும்பாபிஷேகத்தை நடத்தி அருளுகிறார்கள்.

அஷ்ட லக்ஷ்மிகளை வணங்கி, அஷ்ட தரித்திரங்களும் கஷ்ட நஷ்டங்களும் விலகி, சுப இஷ்டங்கள் பூர்த்தியாகி நாமும் நாடும் நலமுறப் பிரார்த்திக்கிறோம்.

27-2-76 அன்று, இந்து சமய சம்மேளனம் நடத்திய கல்லூரி மாணவிகளுக்கான கட்டுரைப் போட்டியில் மாநிலத்தில் முதற்பரிசு பெற்ற எத்திராஜ் கல்லூரி மாணவி செல்வி எஸ். கௌரிபாய்க்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சாரியார் அவர்கள் ஆசி கூறிப் பரிசளிக்கிறார்.



# அரும்பு அம்புகள்



18·4·76
சித்திரை சிறப்பிதழில் ஆரம்பம்

அமரர்

# கல்கி

*

இதுவரை
பிரசுரமாகாத
நாவல்



"இனி மேல் அட்வான்ஸ் தர முடியாது ராஜப்பா. ஒவ்வொரு மாசமும் இதே தொல்லே..." கனகலிங்கம் தீர்மானமாகச் சொன்னார்.

ராஜப்பா விடுவதாக இல்லே.

"ஐயா! இந்த மாசம் மட்டும் தயவு காட்டுங்க. ரொம்ப முக்கிய மான செலவுங்க" என்று குழைந்தார்.

"ம்... ம்... போ... தர முடியாது.... போய் வேலேயைக் கவனி..." மூக்குக் கண்ணுடியை எடுத்துத் துடைத்தபடி பேசினுர் கனகலிங்கம்.

முதலாளியின் முகத்திலிருந்து மூக்குக் கண்ணுடி இறங்கிற்று என்ருல்.. பேச்சுக்கு முற்றுப்புள்ளி என்று அர்த்தம் என்பது பத்து வருட சர்வீஸில் ராஜப்பா அறிந்த ஒன்று.

யோசனேயுடன் தம் இடத்துக்குத் திரும்பினுர் ராஜப்பா.

'சே! வெளியே சொல்லக்கூடிய விஷயமா, இது? பாவிப் பெண் இப்படிச் செய்துட்டாளே. டாக்டரம்மா ரொம்ப நல்லவங்கதான். சரி, வைத்தியச் செலவுக்குக் குறைந்தபட்சம் நூருவது வேண்டுமே? இந்தச் சமாசாரத்தை முதலாளிக்கும் சொல்ல முடியாதே...?' யோசனேயில் ஆழ்ந்த ராஜப்பாவுக்கு ஒன்றுமே புரியவில்லே. ஒரு முடிவுக்கு வந்தார். முகத்தில் தெளிவு.

டைனிங் டேபிளில் சாப்பிட உட்கார்ந்த கனகலிங்கத்துக்கு மனம் மிகவும் சங்கடப்பட்டது.

'நல்ல உழைப்பாளிதான். பத்து வருஷங்களாக என்கிட்டே விசுவாசமாக இருக்கிருன். மாசா மாசம் பண முடைதான். சரி, இந்தத் தடவை, எதுக்காகப் பணம் கேட்கிருன்னு சொல்ல மறுத்திட்டானே!... மனசு ரொம்பவும் இரங்கப்படாதுதான். ஆனுல் இவனுக்கு 'அந்த'க் கணக்கு விஷயமெல்லாம் முழுக்கத் தெரியுமே!... சரி... இந்தத் தடவை கொடுத்துத் தொலேப்போம். இப்ப நமக்குக் காலம் சரியாயில்லே.... இவன் பணத்துக்காக யாரிடமாவது எதையாவது உளறி.... 'ரெய்ட்', அது இதுன்னு வந்து தொலேக்கப் போகிறது. ஏதோ சேர்த்தது இருபதோ, முப்பதோதான்.... அதையாவது பத்திரமா வைச்சுக்கணுமே....' என்றெல்லாம் மனத்துக்குள் யோசனே செய்து கொண்டவர், ஒரு முடிவுக்கு வந்தார்.

கணக்குப் பிள்ளே ராஜப்பாவைக் கூப்பிட்டு அனுப்பினுர்.

"அவர், சீக்கிரமே வீட்டுக்குப் போயிட்டாராம். உடல் சொகமில்லீங்களாம்." டிரைவர் கந்தன் கொடுத்த தகவல்.

"சரி.... கந்தா வண்டியை எடு... உனக்கு அவன் வீடு தெரியுமில்லே...நேரிலே போய்ப் பார்ப்போம்..."

டிரைவருக்கு ஆச்சரியம். 'முதலாளியே கணக்குப் பிள்ளே வீட்டுக்குப் போய் விசாரிக்கப் போகிருரா!'

"கல்யாணி! நம்ப பெண் ரமா, செய்திருக்கிற காரியத்துக்கு.... சே...!" வெளியே தெரிந்தால் மானம் போகும். டாக்டரம்மா கேட்கிற பணத்தைக் கொடுக்கிறதுக்கு வக்கில்லே...முதலாளியும் பணம் தரமாட்டேனுட்டாரு. என்ன ஜென்மம்? இதுக்குத்தான் பெண்ணே வேலேக்குப் போக வேண்டாம்னு முட்டிண்டேன்.... வருமானம் கூடும்னு சொன்னே. இப்போ மானம் வேறல்லே, போகுது....கூப்பிடு அவளே....நான் விசாரிக்கிறேன். நீ உள்ளே வராதே." ராஜப்பாவின் குரல் உயர்ந்து கொண்டே போயிற்று.

அறையில் ரமா, தந்தையின் கால்களில் விழுந்து கதறினுள். ராஜப்பாவினுல் கோபத்தையும், பாசத்தை

# காதல் கலவரம்

பாமா கோபாலன்

யும் அடக்க முடியவில்லே. ரமா சொன்ன ஒரு விஷயம் அவருக்குத் தெம்பு அளித்தது.

"கல்யாணி! நான் ஒரு காரியமா வெளியேபோறேன். எனக்கு வேறே வழி தோணல்லே. சரண் அடைய வேண்டியதுதான். முதலாளிகிட்டே. பத்து வருஷங்கள் வேலே பார்த்தும் பிரயோசனம் இல்லே. பணமிருந்தும் மனசில்லே சே! நாமே போய்ச் சொல்லிவிட வேண்டியது தான்."

கல்யாணி திகைத்துப் போனுள். ராஜப்பா கொல்லேப் புறமாக வெளியேறினுர். அதே சமயம் வாசலில் கார் வந்து நிற்க, முதலாளி அழைக்கிருர் என்று தெரிவிக்க உள்ளே வந்தான் டிரைவர் கந்தன். ராஜப்பா பேசியது கேட்டு, முதலாளியிடம் திரும்பி வந்து சொன்னுன். கனகலிங்கத்தின் முகம் வெளிறியது.

"கந்தா! சீக்கிரம் வண்டியை எடு..... அவனேத் தொடர்ந்து போ... எங்கே போகிருன்?" வியர்த்து விட்ட நெற்றியைக் கர்ச்சீப்பால் ஒற்றி எடுத்தார்.

'பாவி, கடைசியில் இப்படியா செய்யணும்? சரி, சரி, நாமே சொல்லிவிட வேண்டியதுதான்....ஆண்டவா...! கஷ்டப்பட்டுச் சேர்த்த பணமெல்லாம் கோவிந்தாவா?' மனத்துக்குள் புலம்பிக் கொண்டார்.

"...ஐயா... ரயில்வே 'கேட்' மூடியிருக்கு. ஆனுல் அதோ கணக்குப் பிள்ளே வேகமா அந்தப் பக்கம் போயிட்டிருக்காரு."

கனகலிங்கம் ரயில்வே கேட் கீப்பரைச் சபித்துக் கொண்டிருந்தார். இருபது நிமிடங்கள் கழித்து, கேட்

இறக்கப்பட்டு, அவர் கார் புறப்பட்டது. வேகமாகச் சென்றும் ராஜப்பாவைக் காண வில்லே.

பல தெருக்களைச் சுற்றிய பிறகு, ''அதோ.. அந்தப் பச்சை கேட் பங்களாவுள்ளே போகி ருரே, கணக்குப் பிள்ளை....'' என்ருன் கந்தன்.

அந்தப் பங்களா வருமான வரி அதிகாரி பாலன் வசிக்கும் இடம். காரிலிருந்தவாறே, ராஜப்பா வீட்டினுள்ளே நுழைந்து, யாருடனே பேசுவதைக் கவனித்தார் கனக லிங்கம்.

''சரி... சரி... வீட்டுக்கு வண்டியை விடு'' என்று கோபமாகப் பேசினர் கனகலிங்கம். அவர் உள்ளம் ஆத்திரத்தால் கொதித்தது.

''பாவி! காட்டிக் கொடுக்கப் போயிட் டானே! 'வாலண்டரி டிஸ்குளோஷர்' மாதிரி நானே சொல்லி விட்டால் மதிப்பாக

''....சரி, சரி.... என்கிட்டே சொல்லி யாச்சு இல்லே. யார்கிட்டேயும் இது பற்றிப் பேசாதீங்க. விஷயம் அப்புறம் சிரிப்புக்கு இடமாகும்... நானே கவனிச்சு முடிச்சு வைக் கிறேன்.....'.

ராஜப்பாவின் மனத்தில் பாரம் குறைந் தது. மகிழ்ச்சியுடன் நடந்தார்.

'முதலாளியிடமும் ஒரு வார்த்தை சொல் லிட்டுப் போயிடலாமே' என்று எண்ணி, கனகலிங்கத்தின் வீட்டை நோக்கி நடந்தார்.

கனகலிங்கம் கறுவிக் கொண்டிருந்தார்.

இவர் போய்ச் சேர்ந்தார்.

''வாங்கய்யா, கணக்குப் பிள்ளை. ஐயா!''

ராஜப்பா அயர்ந்து போனுர். 'என்ன இளக்காரமாப் பேசுகிருர்? ஏன் பேசுகிருர்?'

''என்னப்பா ராஜப்பா.... சத்யவான் ராஜப்பா.... என்ன சொல்கிருர் இன்கம் டாக்ஸ் ஆபீஸர் பாலன்?'' என்று அதட்ட லாகக் கேட்டார் கனகலிங்கம்.

''ஐயா...! நான் அங்கே போன விஷ யம் உங்களுக்கு எப்படி... அதுக் குள்ளே...'' இணறினன் ராஜப்பா.

''...ஹ...ஹ...ஹா...ராஜப்பா. நீதான் புத்திசாலின்னு நினைச் சுண்டயா...? தூ... பத்து வருஷமா என் வீட்டு உப் பைத் தின்னுட்டு, சே. துரோகமா செய்யறே? கணக்குப் பிள்ளையா இருந்ததாலே, கண்ணுவி எல்லா விஷயங்களும் தெரியும் உனக்கு.....







இருக்குமே... சரி..... இன்னெரு ஆபீஸ ரிடம் போனில் சொல்லி விடுகிறேன்.....'' என்று மனத்துக்குள் முடிவு செய்தார்.

வீட்டுக்குச் சென்று கணக்குப் புத்தகங் களைச் சீர் செய்து கொண்டார். மறைத்து வைத்த இடங்களிலிருந்து பணத்தைச் சேகரித் தார். மாடியில் தனி அறையில் இருந்தபடி. டெலிபோனில், 'டயல்' செய்ய ஆரம் பித்தார். வருமான வரி அதிகாரி வாசுதேவன் வீட்டில் டெலிபோன் ஒலித்தது.

**வ**ருமான வரி அதிகாரி பாலன், ராஜப்பா சொன்ன விவரங்களை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

ராஜப்பா அவர் கால்களில் விழுந்தார்.

ஆபீஸரிடம் போய்க் காட்டிக் கொடுக்கிறயா...? ராஸ்கல்... நன்றி கெட்ட ஜன்மம்.....''

'' ஐயா! நிறுத்துங்க.... என்னமோ பேசிக்கிட்டே போறீங்களே..... நீங்க சொல்றது புரியவே யில்லேயே ?.....'' திகைத்துப் போனான் ராஜப்பா.

''ஒண்ணுமே தெரியாதா ஐயாவுக்கு...? 'வேறே வழியில்லே.... சரண் அடைய வேண்டியதுதான்னு ' சொல்லிட்டு வீட்டிலே யிருந்து நீ புறப்பட்டுப் போய் அந்தப் பாலன் ஆபீஸரிடம் உளறிட்டு வந்திருக்கியே...... உனக்கு ஒண்ணும் தெரியாது ?'' என்று பொரிந்தார் கனகலிங்கம்.

''முதலாளி.... அவசரப்படாதீங்க....... பாலன் ஆபீஸர் வீட்டுக்குப் போய்ப் பார்த்தது உண்மை. அது என் பெண் விஷயமாய்... அவர் மகனோடு என் பெண்ணுக்குக் காதல் ஏற்பட்டு, உறவு ஏற்பட்டு விட்டது. அதன் விளைவாக அவள்கர்ப்ப மாயிட்டாள். கருவைக் கலைக்கலாம்னு நினைச்சேன். நீங்கள் பணம் தரல்லே. சரி, கல்யாணம் செய்து வைக்கலாம்னு அந்த ஆபீஸரிடமே போய் விஷயத்தைச் சொல்லிவிட்டேன். அவர் ரொம்ப நல்லவரு. மகனோடு பேசிக் கல்யாணத்தை முடித்து வைக்கிறேன்னு சொன்னார் கடைசியிலே..... அதைத்தான் உங்களிடமும் ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்..... துரோகின்னு திட்டறீங்க.... ஏங்க, நானு உங்களைக் காட்டிக் கொடுப்பேன் ?.....'' அழுகையுடன் நிறுத்தினான் ராஜப்பா.

கனகலிங்கத்துக்கு மயக்கமா யிருந்தது. 'அவசரப்பட்டு நானே போன் பண்ணிவிட்டேனே ' என்று நினைத்த சமயத்தில், போர்டிகோவில் கார் வந்து நின்றது.

அவர் வரவழைத்த இன்கம்டாக்ஸ் ஆபீசர் வாசுதேவன் காரிலிருந்து இறங்கி உள்ளே வந்தார்!

# வட்ட மேஜை

எனது வேலே, ரயில் பாதையைப் பழுது பார்த்து ரயில் போக்குவரத்து திறம்பட நடைபெறச் செய்வதே. இருப்பினும், என்னை இந்த அவசர காலத்தில் மற்றொரு பொறுப்பை ஏற்று நடத்தச் செய்தது நிர்வாகம். மனமுடையாமல், பாதைப் பராமரிப்பு வேலையையும் கவனித்துக் கொண்டு, புதிய வேலையைத் திறன் பொருந்த ஊழியர்களை வைத்து முடித்தேன். எண்பது நாட்களில் பதினெட்டு கிலோ மீட்டர் தூரப் பாதையை ஒரு கிலோ மீட்டர் நீளத்துக்கு ஒரே ரயில் தண்டவாளம் என்ற விதத்தில் அமைத்தேன். அந்தந்தக் கிலோ மீட்டர் நீளத்தின் இடையில் உள்ள எல்லா ரயில் இணைப்புக்களையும் வளர்ச்சி பெற்ற விஞ்ஞானப் பொறியியல் முறைப்படி இரும்பைக் காய்ச்சி ஊற்றி வெல்டிங் செய்து பற்ற வைத்தோம். ரயிலில் பிரயாணம் செய்யும் கோடிக்கணக்கான பொதுமக்கள் சௌகரியத்துக்காகச் சத்தமின்றி அசைவின்றிப் பிரயாணம் செய்ய வழி வகுத்தோம். எங்கள் பொறி இயல் அதிகாரிகள் எனக்குக் கொடுத்த தெம்பும், என் அனுபவமும் பக்கபலமாக நின்றன. தொழிலாளரிடம் இருபது அம்சத் திட்டம் எப்படி வளர்கிறது பார்த்தீர்களா! விழுப்புரம்—விருத்தாசலம் பிரிவில் பிரயாணம் செய்து பாருங்கள்!

விருத்தாசலம்
23—2—76 பெ. கன்னையா

இருபத்தைந்து முறை ஜெயிலுக்கு வந்ததற்காக, கைதி வெள்ளிவிழாக் கொண்டாடும் துணுக்கு, இது வரை இருபத்தைந்து பத்திரிகைகளில் வெளி வந்து, இருபத்தைந்து முறை அலுத்தும் விட்டது. வெள்ளிவிழா கொண்டாடும் ஜோக் !

பம்பாய் —71
4—3—76 எஸ். ஜெயராமன்

''கல்கி கதம்பம்'' வரப்பெற்றேன். நறுமணம் உள்ள கதம்பம் எனப் பிரித்ததுமே உணர்ந்தேன். எடுப்பான அமைப்பு. தரமான தொகுப்பு. அழகான பதிப்பு. பேராசிரியர் ''கல்கி'' அவர்களின் எழுத்தாற்றல் ஒவ்வொரு பக்கத்திலும் சுடர்விடுகிறது. இவ்வரிய கதம்ப மணம் நுகர வாய்ப்புக் கிடைத்தமைக்கு உளமார்ந்த நன்றி.

குடந்தை
8—3—76 கு. கிருஷ்ணமாச்சாரி

திரு வி. டி. சுவாமி அவர்களைப் பற்றிய கட்டுரையில் (கல்கி 22—2—76) எதிர்காலத்தில் ரசாயன உரமாக அமோனியா வாயுவை நேரடியாகப் பூமிக்குள் பாய்ச்சுவது பற்றி ஒரு கருத்து வெளியாகியுள்ளது. திரு சுவாமி குறிப்பிட்டுள்ள இந்தக் கருத்து விஞ்ஞான உலகின் கவனத்தைக் கவர்ந்து ஆராய்ச்சிகள் நடந்து வருவது மெய்யே.

ஆனால் இது தொடர்பாக, ஸ்பிக் நிறுவனத்தில் அமோனியா வாயு உபபொருளாக உற்பத்தியாகி ஏராளமாக வீணாவதாகவும் அதனை மேற்சொன்ன விதமாகப் பயன்படுத்த முயலலாம் என்றும் அவர் கூறியுள்ளதை மறுக்க விரும்புகிறேன்.

ஸ்பிக்கின் அமோனியா ஆலை யூரியா தயாரிப்புக்காக அமோனியாவும் கரியமில வாயுவும் உற்பத்தி செய்கிறது. அமோனியா இங்கு உபபொருளல்ல, யூரியா தயாரிப்புக்கு மூலப் பொருள்.

எங்கள் யூரியா ஆலை கடந்த முப்பது நாட்களாக நூறு சதத்துக்கும் அதிகமான உற்பத்தித் திறனை உடையதாக விளங்குகிறது. எனவே அமோனியா ஆலை தயாரிக்கும் எல்லா அமோனியா வாயுவையும் இது பயன்படுத்திக் கொள்கிறது. அமோனியா வீணாவதில்லை.

சென்னை — 14 எஸ். ராமய்யா
27—2—76 (ஸ்பிக் நிறுவனத்துக்காக)

# பாரதமே போற்றும் வகையில் ஸ்ரீ மஹாபாரதம்

## ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா அளிக்கும் மற்றோர் அரிய வாய்ப்பு




1975 ஏப்ரல் முதல் ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவில் வ்யாஸ பாரதம் எளிய தமிழில் மொழி பெயர்த்து ப்ரசுரமாகி வருகிறது. சிறியவர்கள்கூட இதைப் படித்து மகிழ்கின்றனர். பல பெரியவர்கள் இதைப் பற்றி மிகவும் பாராட்டி எழுதி வருகிறார்கள்.

மஹாபாரதம் மிகச் சிறந்த முறையில் வெளியாகிவரும் விஷயத்தை அறிந்த பலர் புதியதாக மெம்பராக விரும்புகிறார்கள். இவர்கள் ஆரம்ப முதலே தங்களுக்கு மஹாபாரதம் வேண்டுமென்கின்றனர். வேண்டிய அளவே காபிகள் அச்சிடப்பெறுவதால் பழைய காபிகள் கிடைப்பதரிது. புதியதாகச் சேர விரும்புகிறவர்களுக்கும் மஹாபாரதம் முதலிலிருந்தே கிடைக்க வழி செய்யவேண்டும் என்கிற நோக்கத்துடன் 1975 ஏப்ரல் முதல் 1976 மார்ச் வரை ப்ரசுரமாயிருக்கும் மஹாபாரதப் பகுதியைத் தனிப்ரதியாக அச்சிட்டு வழங்கத் தீர்மானித்திருக்கிறோம். 368 பக்கங்கள் கொண்ட இதன் விலை 10 ரூபாய்.

1976 ஏப்ரல் முதல் மெம்பராக விரும்புகிறவர்கள் வருஷச் சந்தாவான 15 ரூபாயும் தனி ப்ரதியின் விலையான 10 ரூபாயும் சேர்ந்து 25 ரூபாய் அனுப்பவேண்டும். ஏப்ரல் மாதம் 15 தேதிக்குள் பணத்தைச் செலுத்தியவர்களுக்கே காபிகள் கிடைக்கும். இந்த அரிய ஸந்தர்ப்பத்தை யாரும் இழக்கவேண்டாம் என்று ஸவிநயம் ப்ரார்த்திக்கிறோம். இந்த மாதிரியான வாய்ப்பு மறுமுறை கிடைப்பது கஷ்டம்.

ஸ்ரீ அழகியசிங்கரின் அருள்மொழி, ஸ்தோத்திரங்கள், பகவத் கீதை, தர்மஸாரம் முதலியன தொடர்ந்து ப்ரசுரங்களாகும்.

வேதங்களிலிருந்து சில அருமையான விஷயங்கள் புதிய வருஷத்திலிருந்து ப்ரசுரங்களாகும்.

ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவின் வருஷச் சந்தா 15 ரூபாய்
தனிப்பிரதியின் விலை ரூ. 1-50

பணம் செலுத்தவேண்டிய விலாஸம்:

மேனேஜர்
ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா
34 டாக்டர் ரங்காசாரி ரோடு
சென்னை 600 018

ஒரு எம். ஜி. ஆர். படங்களுக்கென்று ஒரு தனி நியதி உண்டு. அந்த நியதியின் நீதிக்கு இந்தப் படத்திலும் தலை வணங்கி யிருக்கிறார்கள்.

தனியாகப் பிறந்த பணக்கார வாலிபன் விஜயனுக்கு ஒரு தங்கை கிடைக்கிறாள். அவளை வாழ வைக்க முயலும் போது அவன் விளையாட்டாய்ச் செய்த தவற்றின் கொடூர விளைவுகளை எதிர்பாராத விதத்தில் சந்திக் கிறான். பிராயச்சித்தத்துக்காக அவன் துடித்த போது அவன் தந்தையின் கோபத் தைத் தாங்க முடியாமல் வீட்டைவிட்டு வெளியேறிப் பல சங்கடங்களைச் சந்திக்கிறான். அத்துடன் ஓர் அழகியின் காதலுக்கும் இலக் காகிறான்.

இப்படிக் கொஞ்சம் கதையும் இருக்கிறது.

எம். ஜி. ஆர். இப்படத்தில், பட்லராக, பைத்தியக்காரனாக, நீதிக்குத் தலை வணங் கும் நேர்மையாளனாக வந்து தமக்கே உரிய திறமையுடன் சக்கைப் போடு போட் டிருக்கிறார். வழக்கத்துக்கு விரோதமாக இப்படத்தில், கண்ணீர் விட்டு, அடி உதைகளை வாங்கிக் கொள்ளவும் செய்கிறார்!

ஒளிப்பதிவில் தம்பு ஓர் அற்புதமே நிகழ்த்தி யிருக்கிறார். குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய சில காட்சிகள்: மலைப் பாறை உச்சியில், அருவி வெள்ளத்தில், நடந்த பயங்கரச் சண்டைக் காட்சி; அருவி வெள்ளத்தில் விழுந்து விடா மல் தொங்கிக் கொண் டிருந்த லதாவை எம். ஜி. ஆர். காப்பாற்றிய காட்சி, மோட்டார் சைக்கிள் பந்தயம்.

கவர்ச்சி உடையில் வந்து கவர்ச்சி நடை நடந்து ரசிகர்களைக் கவரு கிறார் லதா. லதா கொடியாகக் கொழு கொம்பைச் சுற்றிக் கொள்வதில் வியப்பில்லை. அவரிடம் உருக்கமான நடிப்பை யாராவது எதிர்பார்த்தால் அது தான் வியப்பு!

வி. எஸ். ராகவனும், எஸ். வரலட்சுமியும் விஜயனின் பெற்றோராக வந்து முதலில் துயரக் கண்ணீர் சிந்திக் கடைசியில் ஆனந்தக் கண்ணீர் சொரிகின்றனர்.

விஜயனின் உடன் பிறவாத் தங்கையாக வரும் ரோஜா ரமணியின் கள்ளங்கபடமற்ற தோற்றமும் — புஷ்பலதாவின் அமைதியும், ஆவேசமும் கலந்த நடிப்பும் படத்துக்குச் சுவையூட்டுகின்றன.

வில்லனை நம்பக் கூடாதென்றாலும் நம்பியார் நடிப்பில் என்றும் நம்பிக்கை வைக்க லாம். எதிர்பார்த்ததற்கு அதிகமாகவே தம் அநுபவ நடிப்பினால் ரசிகர்களுக்குத் திருப்தி அளிக்கிறார்.

புலமைப் பித்தனின் ''இந்தப் பச்சைக் கிளிக்கொரு செவ்வந்திப் பூவின்....'' என்ற பாட்டு எஸ். வரலட்சுமி, ஜேசுதாஸ் ஆகியவர்களின் குரலில் இனிமையாக ஒலிக்கிறது.

வெற்றிப் படங்கள் பலவற்றை இயக்கிய அநுபவ டைரக்டர் நீலகண்டன் இப்படத்தின் இயக்குனர். ஆர். கே. சண்முகத்தின் உரையாடல் பல இடங்களில் சிந்திக்க வைக் கிறது. மொத்தத்தில் 'வாத்தியார்' ட்ரேட் மார்க்!

— **கார்த்தன்**



# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 26. நூல் வரிசை

### அணிவதற்கும் அறிவதற்கும் அழகு மணி மாலை

**மா**மல்லபுரத்தில் கல்கி கண்ட ஒரு கனவு, பன்னிரண்டு ஆண்டுகளாய்க் கற்பனையில் விரிந்து கதையாக உருப்பெற்று, அவருடைய சஞ்சிகையில், ''சிவகாமியின் சபதம்'' என்ற மகுடத்துடன் படலம் படலமாய் வந்த விவரத்தை ஏற்கனவே அறிந்து கொண்டோம். அது வந்து கொண்டிருக்கையிலேயே அதன் ஆசிரியர், புத்தக வடிவில் அதைக் கொண்டு வருவதற்கு ஆசையுடன் திட்டம் இட்டார். உடனேயே அல்லாமல், சஞ்சிகையில் கதை முற்றுப் பெற்றுச் சுமார் இரண்டு ஆண்டுகள் கடந்துதான், 1948 ஏப்ரலில், அந்தத் திட்டம் நிறைவேறியது. அவ்வளவு தாமதத்துக்குக் காரணம், அவரே அறிவிப்பு ஒன்றில் சொன்னது போல், ''புத்தகத்தை ஒப்பற்ற கலை அழகு வாய்ந்த பிரசுரமாகச் செய்ய வேண்டும் என்னும் விருப்பம்தான்.'' ''மணியம்'' ''சந்திரா'' ''ராகவன்'' ஆகிய கலைஞர்களின் வண்ணச் சித்திரங்கள் நிறைந்ததாய், உயர்தரக் காகிதத்தில் நேர்த்தியாய் அச்சடித்து, கல்கி நிறுவனத்தார் வழங்கிய அந்த நூலைப் பார்த்தவர்கள், ''இந்தப் புத்தகம் போல் இதுவரையில் தமிழில் வந்ததில்லை'' என்று, அதன் முன்னுரையில் ஆசிரியர் சொன்னதை அப்படியே ஆமோதித்தார்கள்.



அதன் பிந்தையப் பதிப்புக்களை வெளியிடும் உரிமையை மங்கள நூலகத்தாரிடம் கல்கி ஒப்படைத்தார். அவர்களும், கிட்டத்தட்ட முதல் பதிப்புக்கு ஒப்பான தரத்தில், அதே சித்திரங்களுடன், அடுத்தடுத்த பதிப்புக்களை வெளியிட்டு வருகிறார்கள். ''பார்த்திபன் கனவு'' நூலையும் முதலில் கல்கி தம் பொறுப்பில் வெளியிட்டு விட்டு, பின்னர், அவர்கள் வசமே விட்டு விட்டார். ''பொன்னியின் செல்வன்'' நாவலை, முதல் பதிப்புக்கே அவர்களிடம் கொடுத்துவிட்டார். மணியம் வரைந்த அற்புதச் சித்திரங்களை ஏராளமாய்க் கொண்டதாயும், எடுப்பான முறையிலும், அதை அவர்கள் வெளியிட்டார்கள். பொன்னியின் புதல்வருக்கு ஓர் அஞ்சலிக் காணிக்கையாய் அமைந்த அதை ''எல்லா விதத்திலும் முதல்தரமான வெளியீடு'' என்று, அதன் முன்னுரையில் ராஜாஜி பாராட்டிச் சொன்னார்.

இந்த மூன்று நூல்களையும், ராஜேந்திரனின் அனுமதியுடன் கல்கியின் வேறு நூல்களையும், இதே மங்கள நூலகம் அடுத்தடுத்தும், பதிப்புக்கு மேல் பதிப்பாகவும் வெளியிட்டுள்ளது. இதற்கு முன் கல்கியின் எழுத்துக்களைப் பெரும் அளவில் வெளியிட்டவை, தமிழ்ப் பண்ணையும் பாரதி பதிப்பகமும்.

வாரா வார இதழ்கள், இடையிடையே சிறப்பிதழ்கள், ஆண்டுதோறும் தீபாவளி மலர்கள் ஆகியவற்றை வெளியிடும் வேலைகள் காரணமாய், மிகவும் அவசியமானபோது, அபூர்வமாகத்தான் சில புத்தகங்களைக் கல்கி நிறுவனம் பிரசுரித்து வந்திருக்கிறது. இவ்விதப் புத்தகங்களில் ஒன்று, பாரதி மண்டபத் திறப்பு விழாவின் போது வெளியான ''பாரதி நினைவு மலர்''. கவிஞரின் சிறப்பு மிக்க பாடல்களுக்கு எழில் மிக்க சித்திர அலங்காரம் செய்து, கனமான ஆர்ட் காகிதத்தில் அச்சடித்த அந்த மலர், பாரதியாரின் பெருமைக்கு ஏற்றப் பெருமிதக்

காணிக்கை. அதன் மூலம் கிடைத்த லாபம் முழுதும் பாரதி மண்டப நிதியில் சேர்ப்பிக்கப்பட்டது.

இன்னொரு அபூர்வமான வெளியீடு, மகாத்மா காந்தியைப் பற்றிக் கவி ரவீந்திரநாத் தாகூர் எழுதிய கட்டுரைகளின் தமிழாக்க நூல். கவிஞரின் குமாரர் ரதீந்திரநாத் தாகூரின் விருப்பத்துக்கு இணங்க, கல்கி வெளியிட்ட அந்தப் புத்தகத்தின் விற்பனைப் பணம், விசுவபாரதி மூலம் காந்தி நினைவு நிதிக்குச் சமர்ப்பணம் ஆயிற்று. ''மகாத்மா காந்தி'' என்ற மகுடம் கொண்ட







அப் புத்தகத்தை வங்காளி மூலத்திலிருந்துமொழிபெயர்த்துக் கொடுத்தவர், கல்கியின் இளைய நண்பர்களில் ஒருவரான டி. எஸ். பார்த்தசாரதி. இசைக் கலையுடன் பல மொழிகளிலும் அவர் தேர்ச்சி கொண்டவர் என்பது கல்கிக்கு ஏற்கனவே தெரியும். அத்துடன் ஏற்ற பணியை மிகக் குறுகிய காலத்தில் மிகத் திருத்தமாய் அவர் செய்ய வல்லவர் என்பதை அப்போது கல்கி கண்டு கொண்டார். (பின்னர் பார்த்தசாரதி, சாகித்திய அகாதமியின் வெளியீட்டுக்காக, டாகூரின் நாடகங்களை வங்காளி மூலத்திலிருந்து தமிழில் ஆக்கிக் கொடுத்துப் புகழ் அடைந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.)

பிறரிடம் திருத்தமான பணியை எதிர்பார்த்த கல்கி, தாமே அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் இருந்தார். ஒரு சமயம் டி. கே. சி., பரீரதனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில், கல்கியின் இந்த இயல்பைப் பற்றிக் குறிப்பிட்டார்: ''அவர்களுடைய நுட்பமான அறிவையும், நிர்வாகத் திறத்தையும், வழுவில்லாமல் எதையும் திருத்தமாய்ச் செய்யும் காரியங்களையும் பார்த்துச் சில வேளை வியப்பேன்; சில வேளை நாணுவேன்; சில வேளை பயப்படுவேன்.''

செய்வதைத் திருந்தச் செய்வதோடு கல்கி நில்லாமல், அப்படிச் செய்ததையே மேலும் மேலும் திருத்தி மெருகிட்டுக் கொண்டிருப்பார். அதன் காரணமாய்ப் பிறருக்கு எவ்வளவு தொல்லை, தமக்குமே எவ்வளவு சங்கடம் என்பதை, ''ஏட்டிக்குப் போட்டி'' இரண்டாம் பதிப்பின் முகவுரையில்



அவரே நகைச்சுவையுடன் சொல்லி இருக்கிறார்:

தமிழ்ப் பண்ணை சின்ன அண்ணாமலை அவர்கள், ''ஏட்டிக்குப் போட்டியின் இரண்டாம் பதிப்பு வெளியிடுகிறேன்'' என்று சொன்னபோது, ''சரி செய்யுங்கள்'' என்று அனுமதி கொடுத்தேன். ''ஆனால் புத்தகத்தை முழுதும் அச்சிட்ட பிறகு என்னிடம் கொண்டு வாருங்கள்; இரண்டாம் பதிப்புக்காகத் திருத்திக் கொடுக்கும்படி தயவுசெய்து என்னிடமே கேட்க வேண்டாம்'' என்று நிபந்தனை விதித்தேன். ஏனெனில் திருத்துகிற விஷயத்தில் — அதிலும் நான் எழுதுகிறதைத் திருத்துகிற விஷயத்தில் — எனக்கு எப்போதுமே அடங்காத ஆசை உண்டு. ''சத்திய சோதனை'' என்னும் மகாத்மா காந்தியின் சுய சரிதத்தை ''நவசக்தி'' பத்திரிகைக்காக மொழிபெயர்த்தேன். அப்போது 'மூன்று புரூப்'களில் மூன்று தடவை திருத்தினேன். புத்தகமாய்ப் போடுவதற்கு முன் ஒரு தடவை திருத்திக் கொடுத்தேன். அப்புறம் புத்தகத்தின் 'புரூப்' கேட்டு வாங்கி இன்னும் மூன்று தடவை திருத்தினேன். ''சத்திய சோதனை''யை அச்சிட்ட அச்சுக்கூடக்காரர், ''சத்தியமாக இனிமேல் இந்த ஆசிரியரின் புத்தகத்தை அச்சிடுவதில்லை'' என்று சத்தியம் செய்து விட்டார்.

''பார்த்திபன் கனவு'' கதையைக் கல்கி அச்சுக்கூடத்தில் புத்தகமாய் அச்சிடுவதற்குள்ளே ஒன்பது தடவை திருத்தினேன்!... இந்த ஞாபகம் எல்லாம் இருந்தபடியால் தான், ''தயவு செய்து ஏட்டிக்குப் போட்டியைத் திருத்துவதற்கு என்னிடம் கொடுக்க வேண்டாம்'' என்றேன்.

''ஏட்டிக்குப் போட்டி'' புத்தகத்தின் உள்ளடக்கப் பக்கங்களில் திருத்தம் எதையும் கல்கி செய்யவில்லை என்றாலும், பொருளடக்கப் பக்கத்தில் முன்பு



பாபு : உங்கள் வீட்டில் 16-5-74 என்று பெரிசா எழுதி வைத்திருக்கிறீர்களே. அது வீடு கட்ட ஆரம்பித்த தேதியா, இல்லே கிரகப் பிரவேசம் செய்த தேதியா?

கோபு : இரண்டும் இல்லே. வீட்டை அடமானம் வைத்த தேதி.

—லலிதா செல்லப்பா

---

செய்யத் தவறிய ஒன்றை ஒரு குறிப்பில் வெளியிடச் சொன்னார். அதன்படியே அந்தப் பக்கத்தில், ''தலைகீழ்ப் பாடம்'' ''ஜீவரசம்'', ''புது ஓவர்சியர்'' ஆகியவற்றில் உடுகுறி அடையாள மிட்டு, அவை தழுவி எழுதப்பட்டவை என்ற குறிப்புக் காண்கிறது. பின்னர் இந்தப் புத்தகத்தின் பதிப்புக்களை வெளியிட்ட பாரதி பதிப்பகம், இந்தக் குறிப்பு எவ்வளவு முக்கியமானது என்பதை உணராமல், இதை விட்டு விட்டது.*

இன்னொரு குறையையும் இங்கே சுட்டிக் காட்ட வேண்டியதாகிறது. 1947ல் தமிழ்ப் பண்ணை வெளியிட்ட ''பாங்கர் விநாயகராவ்'' நூலில், கல்கியின் விரிவான முகவுரை ஒன்று இருந்தது. அதில் அவர் ராஜாஜி ஆசிரமத்தில் சேர்ந்த விவரம், அங்கே தாம் அடைந்த அனுபவங்கள், ''விமோசனம்'' பத்திரிகையைத் தொடங்கி நடத்திய விதம் முதலியவற்றை எழுதியுள்ளார். எல்லாம் சுவையான சுய வரலாற்றுக் குறிப்புக்கள். இந்த முகவுரையையும் தனது பதிப்பிலிருந்து பாரதி பதிப்பகம் விலக்கி விட்டது. கல்கியின் நேர் பார்வை இல்லாமையால் நேர்ந்த குறை இது.

''ஏட்டிக்குப் போட்டி'' தொகுப்பில் அடங்கிய கதை, கட்டுரைகள், வெளியிலிருந்து கல்கி எழுதியனுப்பி ஆனந்த விகடனில் வந்தவை. ஆகவே, அவற்றைப் புத்தகமாய் வெளியிடுவதற்குத் தடை ஏதும் இருக்கவில்லை. ஆனால், ஆனந்த விகடனில் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தவர் என்ற முறையில், அதில் அவர் எழுதியவற்றைப் புத்தகமாகப் போடுவதற்கு அப்போதைய காப்பிரைட் சட்டத்தின்படி அந்தப் பத்திரிகையின் அதிபருடைய அனுமதி வேண்டியதா யிருந்தது. அந்த அனுமதி எஸ். எஸ். வாசனிடமிருந்து கிடைப்பதாய் இல்லை.

அந்நிலையில் சின்ன அண்ணாமலை ஒரு சோதனை செய்தார். ஆனந்த விகடனில் வந்திருந்த கல்கியின் இலங்கை யாத்திரைக் கட்டுரைகளையும் சிறுகதைகளில் சிலவற்றையும் தமது தமிழ்ப் பண்ணையிலிருந்து புத்தக வடிவில் வெளியிட்டார். ஆனால் அந்தச் சோதனை பலிக்கவில்லை. சட்டப்படி நடவடிக்கை எடுக்கப் போவதாய் வாசன் அறிவிக்கவே, மேற்கொண்டு ஏதும் வெளியிடுவதில்லை என்று சின்ன அண்ணாமலை ஒப்புக் கொண்டு, ஏற்கனவே வெளியிட்டதுடன் நிறுத்திக் கொண்டார்.

வாசனும் கல்கியும் பிணங்கி யிருந்த காலம் அது. பின்னர் பிணக்கு நீங்கி, பரஸ்பர நேசமும் மதிப்பும் மீண்டும் உண்டானபோதும், கல்கி வேண்டிய அனுமதியை வாசன் அளிக்கவில்லை. ஏன் அளிக்கவில்லை என்பதற்குக் காரணம், அல்லது சமாதானம் என்ன? கல்கிக்கு வாசன் 3-11-51 தேதியில் எழுதிய கடிதம்—

> புத்தக வெளியீட்டு இலாகா ஒன்றைத் துவக்கலாம் என்று வெகு காலமாய் யோசித்து வந்திருக்கிறேன்; விரைவிலேயே அது உருப் பெறலாம். அப்படி அதை நடத்தும்போது தங்களது கதைகளும், கட்டுரைகளும் அதன் ஆரம்பத்துக்குப் பெரிதும் உதவியாயிருக்கும். அதனால்தான் (அவை பற்றிய) உரிமைகளை ஒரு பதிப்புக்குக்கூட நான் விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. வேறு நோக்கம் ஏதும் கிடையாது. என்னை நல்லபடியாய்ப் புரிந்துகொள்வீர்கள் என நம்புகிறேன். (ஆங்கிலத்திலிருந்து).

இதில் சொன்னபடி புத்தக வெளியீட்டு இலாகா ஒன்றை அப்போது வாசன் ஆரம்பிக்கவும் இல்லை; கல்கி உயிரோடு இருந்தவரை அவருடைய ஆனந்த விகடன் எழுத்துக்களில் முன்பு வெளிவந்தவை போக, மற்றவை புத்தகமாய் வெளிவர முடியவும் இல்லை.

வாசனுடன் அது விஷயமாய் மேலும் கல்கி தொடர்பு கொள்ளவில்லை. ஆயினும் தம்மை மட்டுமின்றி எல்லா எழுத்தாளர்களையுமே பாதிப்பதான அந்த உரிமைப் பிரச்னையை அவர் அப்படியே விட்டுவிடவில்லை. அது பற்றி நியாய வாதங்கள் செய்து கொண்டே இருந்தார். 1954 பிப்ரவரி முதல் வாரத்தில் நடந்த இரண்டாவது தமிழ் எழுத்தாளர் மகாநாட்டில் கல்கி நிகழ்த்

---

* தமிழ்ப் பண்ணையின் ''ஏட்டிக்குப் போட்டி'' பதிப்பு, அண்மையில்தான் பார்க்கக் கிடைத்தது. முன்பே கிடைத்திருந்தால், அதில் உள்ள குறிப்பின் விவரம், ''மூலத்தன்மை'' என்ற அத்தியாயத்தில் இடம் பெற்றிருக்கும் — நூலாசிரியன்.

கோத்ரெஜின்

# புதிய டர்கிஷ் பாத்




## அமோகமான சோப், நம்பமுடியாத விலையில்

**Re.1·00** (வரிகள் தனி)

கோத்ரெஜ் மட்டுமே அளிக்கக் கூடிய சோப் அபரிமிதமான நுரை...நீடித்த உபயோகம்...புத்துணர்ச்சியளிக்கும் நறுமணம் மற்றும் சிக்கன விலை.

**கோத்ரெஜின் டர்கிஷ் பாத்**

Interpub/GTB/1/75/TAM

"உலகத்தில் போர் நடப்பது நல்லதா, அது தேவையா ?" ஆசிரியர் கேட்டார்.

"தேவையே இல்லாத ஒன்று"–ஒரு மாணவன் பதில் சொன்னான்.

"ஏன் ?"

"போர் என்றால் ஒரு சரித்திரம் உருவாகும். சரித்திரமென்றால் அது எங்களுக்குப் பாடமாகும். பாடமென்றால் நீங்கள் எங்களைக் கேள்வி கேட்டு, பரீட்சை வைத்து உயிரெடுப்பீர்கள். ஏன் இந்த வம்பெல்லாம்...?" – முத்து



திய தலைமை உரையில், அந்தப் பிரச்னை முக்கியத்துவம் அடைந்தது. பத்திரிகைகளிலும், சஞ்சிகைகளிலும் வெளியாகும் கதை கட்டுரைகளின் காபிரைட் உரிமை, அவை சன்மானத்துக்காக எழுதப்பட்டதாயினும், சம்பளத்துக்காக எழுதப்பட்டதாயினும், அவற்றை எழுதியவர்களையே சாரவேண்டும் என்பதை அவர் வற்புறுத்தினார்; அந்த உரிமை, ஐயத்துக்கோ, தாவாவுக்கோ இலக்காகாத விதத்தில் காபிரைட் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று கோரினார்.

இந்தக் கோரிக்கையை விடுத்த ஆண்டின் இறுதியில் கல்கி காலமானார். அதற்குப் பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு நாள் ராஜேந்திரனை எஸ். எஸ். வாசன் ஃபோனில் கூப்பிட்டு, அவருடைய தந்தையார் ஆனந்த விகடனில் எழுதியவற்றின் உரிமை யாவும், வாரிசாகிய அவரையே சாரும் என்று தெரிவித்தார்.

அதைக் கேட்டுவிட்டு வாசனுக்கு ராஜேந்திரன் எழுதிய கடிதம்:

(23–12–67) 20ம் தேதி காலையில் தங்கள் குரலை டெலிபோனில் கேட்டு மிகவும் மகிழ்ந்தேன்.

எனது தகப்பனார் அமரர் கல்கி, இரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஆனந்த விகடனில் எழுதியுள்ள சிறுகதைகள், நாவல்கள், கட்டுரைகள் முதலிய அனைத்தின் சகல உரிமைகளும் எனக்கே உரியன என்பதாகச் சட்டபூர்வமாய்த் தாங்கள் உணர்ந்து அறிவதாகத் தெரியப்படுத்தினீர்கள். மிக்க நன்றி.

இரு கல்கி அவர்களுடைய கதைகள் நாவல்கள், கட்டுரைகள் முதலிய அனைத்தும் பல விதத்திலும் பிரபலம் அடையத் தேவையான நடவடிக்கைகளை எடுத்து வருகிறேன். தங்களுடைய பெருந்தன்மைக்கும் அன்புக்கும் என்றும் கடமைப்பட்டவனாகிறேன். தாங்கள் டெலிபோன் மூலம் தெரிவித்த நற்செய்தியை ஒரு கடிதம் மூலமாகவும் எனக்கு எழுதுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

அப்படியே ஊர்ஜிதக் கடிதம் ஒன்று வந்தது.

வாசன் அவ்வாறு ராஜேந்திரனிடம் அவருக்கு உள்ள உரிமையை அறிவித்தது பாராட்டத் தக்கதே. ஆனால் அதை அவர் பத்து ஆண்டுகளுக்கு முன் செய்திருக்க வேண்டியது: ஏனெனில், ''எழுத்தின் உரிமை எழுத்தாளர்களுக்கே '' என்று நிச்சயமாய் விதிக்கும் புதிய காபிரைட் சட்டம் ஒன்று, 1957 லேயே நிறைவேறி அமலுக்கு வந்துவிட்டது. அவ்வாறு தாமதமாகவேனும், புதிய சட்டத்தின்படியான உரிமை நிர்ணயங்களை, எவ்வாறு வாசன் உணர்ந்தார், அல்லது உணரும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்பது, இந்த வரலாற்றுக்குப் புறம்பானது.

தொடக்க காலம் முதல் கல்கியின் எழுத்துக்களையெல்லாம் ஆசையுடனும், கருத்தூன்றியும் படித்து வந்தவரும், பல எழுத்தாளர்களின் நண்பருமான, அட்வொகேட் டி. எஸ். ரங்கராஜன் சுவையான தகவல் ஒன்றைத் தெரிவிக்கிறார். ஆனந்தவிகடனில் வந்த தமது எழுத்துக்களைப் புத்தகமாய்ப் போடும் உரிமை சம்பந்தமாய், 1943ல் பிரபல வழக்கறிஞர் என். ராஜகோபால அய்யங்காரை கல்கி ஆலோசனை கேட்டாராம். அந்த வழக்கறிஞர் அப்போதிருந்த சட்டத்தின்படி கல்கிக்கு முழு உரிமை கிடையாது என்றும், பத்திரிகை அதிபரின் அனுமதி கட்டாயம் வேண்டும் என்றும் கூறினாராம். அதே வழக்கறிஞர்தான் எழுத்தாளர்களுக்குப் பாதகமாய் இருந்த விதிகளைச் சாதகமாய் மாற்றித் திருத்தச் சட்டத்துக்கு, நகல் மசோதாவை வரைந்து கொடுக்கும் பொறுப்பையும், பெருமையையும் அடைந்தாராம். கல்கியின் காலத்திலேயே அந்தத் திருத்தச் சட்டம் வந்திருந்தால் அவருக்கு எவ்வளவு மகிழ்ச்சியாய் இருந்திருக்கும்!

கல்கிக்குப் பெரிதும் மகிழ்ச்சி ஊட்டிய விஷயம் ஒன்று 1953ல், கள்வனின் காதலி ''சோர் கீ ப்ரேமிகா'' என்ற பெயருடன் ஹிந்தியில் மொழிபெயர்ப்பாகிப் புத்தகமாய் வந்ததாகும். அதை மொழிபெயர்த்தவர், அப்போது தில்லியில் ''நவ் பாரத் டைம்ஸ்'' பத்திரிகையில் உதவி ஆசிரியராய் இருந்த பூர்ணம் சோமசுந்தரம். இப்போது ரஷ்யாவின் தலைநகரில், முற்போக்குப் பதிப்பகத்தின் தமிழ்ப் பகுதி பொறுப்பாளராய் இருக்கும் சோமசுந்தரம், கல்கியின் அந்த நாவலை ஹிந்திக்கு அளிக்க வாய்த்ததைப் பெரிய பெருமையாய்க் கருதுகிறார். அதை ஹிந்தி வாசகர்கள் அதன் கதை அம்சத்துக்காக மட்டுமின்றி, அதன் முழு தமிழ் சூழலுக்காகவும் பாராட்டினார்கள் என்றும்,

கல்கிக்குத் தமிழ்ப் பிரேம்சந்த் எனப் பெயர் சூட்டினார்கள் என்றும் மாஸ்கோவிலிருந்து எழுதிய கடிதம் ஒன்றில் தெரிவிக்கிறார்.

கல்கியின் "அலையோசை" நாவல், 1964ல் ரஷ்ய மொழியில் வெளியாகி, ஐம்பதாயிரம் பிரதிகள் நாலே நாட்களில் விற்பனை ஆயின. அதை மொழி பெயர்த்தவர் இப்ரகிமாவ் (Ibragimov). அவருக்குச் சோமசுந்தரம் வேண்டும் போது விளக்கங்கள் சொல்லி உதவி செய்தார்.

(பூர்ணம் சகோதரர்கள் நால்வருமே கல்கியுடன் இலக்கியத் தொடர்பு கொண்டு பெருமை அடைந்தவர்கள்; அவர் அளித்த ஊக்கத்தினால் எழுத்துத் துறையில் பெயர் எடுத்தவர்கள்.

மூத்தவர் உமாசந்திரன், 1966ல், கல்கி வெள்ளி விழாப் பரிசுத் திட்டத்தில் "முள்ளும் மலரும்" நாவலுக்குப் பத்தாயிரம் ரூபாய் முதல் பரிசு பெற்றவர். இரண்டாமவர்தான் சோமசுந்தரம். மூன்றாவது சகோதரர் பாலகிருஷ்ணன் சிறுகதைப் போட்டி ஒன்றில் பரிசு பெற்றவர். கடைசி சகோதரர் பூர்ணம் விசுவநாதன், ஏற்கனவே சொன்னபடி "கள்வனின் காதலி" நாவலை முதல் முதலாக நாடகமாக்கி அதன் கதாநாயகனை நடித்தவர்.)

"கள்வனின் காதலி" குஜராத்தியிலும் வந்துள்ளது. இதை மொழி பெயர்த்த நவநீத் மதராஸி, "பார்த்திபன் கனவு" நாவலையும் தம் மொழியில் ஆக்கியுள்ளார்.

மற்றப் பிரதான பாரத மொழிகளிலும் "பார்த்திபன் கனவு" சாகித்திய அகாதெமியின் வெளியீடாக வந்துள்ளது—மீ.ப. சோமு சுருக்கிக் கொடுத்த வடிவில். ஹிந்தியில் ஆக்கியவர் கல்கி உதவி ஆசிரியர் ரா. வீழிநாதன். இவரே "அலை ஓசை" நாவலை நாஷனல் புக் டிரஸ்டுக்காக ஹிந்தியில் பெயர்த்துக் கொடுத்துள்ளார். மற்றப் பாரத மொழிகளிலும் இந்த நாவலை இதே டிரஸ்டு கொண்டு வந்திருக்கிறது.

ஹிந்தி — தமிழ் இணைப்புப் பணிக்காகப் பரிசுகளும் பாராட்டுப் பத்திரங்களும் பெற்றுள்ள வீழிநாதன், கல்கியின் எழுத்துக்களைப் பெரும் அளவில் ஹிந்தி வாசகர்களுக்கு வழங்கிய பெருமைக்கு உரியவர். அப்படி வழங்கியவற்றில், சோலைமலை இளவரசி, மோகினித் தீவு, வீணை பவானி, தூக்கு தண்டனை, புலி ராஜா ஆகியவை சிறப்பாய்க் குறிப்பிடத் தக்கவை.

புலிராஜாவுக்குப் பல மொழிகளில் யோகம் அடித்திருக்கிறது. 1966ல் ஜெர்மன் மொழியில் வெளியான

# கடமை அழைக்கிறது

மன நோய் மருத்துவ மனையில் கடமையில் கண்ணும் கருத்துமாக இருக்கும் நர்ஸ் சீதா வந்துவிட்டால் போதும், நோய்கூடச் சொன்னபடி கேட்கும்.... ஆனால் சீதாவின் மனம் நிம்மதியில்லாமல் தவித்தது யாருக்கும் தெரியாது. துயரம் நிறைந்த அவளது பூர்வ கதை Flash Back உத்தியில், குழப்பம் இல்லாமல் காட்டப்படுகிறது. அது வாழவேண்டிய வயதில், வாட நேர்ந்த வயதும் பெண்ணின் கதை.

நவரஸங்களேயும் நடிகையர் திலகம் அநாயாசமாக வெளிப்படுத்துகிறார். புதிதாக வேலைக்கு வந்த டாக்டர் சந்திரன், நர்ஸ் சீதாவிடம் தன் காதலை வெளியிட்டவுடன், அடேயப்பா! அவளுக்கு வந்த கோபத்தைப் பார்க்க வேண்டுமே!

கடைசிக் காட்சியில், நர்ஸ் உற்சாகம் கரை புரண்டோட டாக்டர் சந்திரனைக் கண்டு தன் சம்மதத்தைத் தெரிவிக்க விரைகிறாள்; ஆனால் டாக்டர் சந்திரன் தம் தந்தையால் நிச்சயிக்கப்பட்ட பெண்ணை மணந்து கொள்ள ஊருக்குப் போயிருப்பதாக அவளுக்கு எழுதி வைத்திருந்த கடிதம் கூறுகிறது; நர்ஸ் சீதா அடைந்த விவரிக்க முடியாத ஏமாற்றத்தை நடிகையர் திலகம் ஒரு விநாடிப் போதில் காட்டி விடுகிறார். அந்த ஏமாற்றம் காரணமாக நர்ஸ் வேலையை உதறிவிட்டு ஓடிய சீதா மீண்டும் தன்னைக் கடமை அழைப்பதை மீற முடியாமல் மறுபடியும் பொறுப்பை ஏற்கும் கட்டத்தில் நாடகம் முடிகிறது.

ஜெமினி கணேசன் டாக்டர் சந்திரன். நர்ஸ் சீதாவைத் தம்மையும் அறியாமல் டாக்டர் சந்திரன் காதலிக்கத் தொடங்குவதைச் சிறப்பாக நடித்துக் காண்பிக்கிறார். ஆர்ப்பாட்டம் இல்லாத, இயல்பான நடிப்பு.

நாடகத்தின் நகைச்சுவைப் பொறுப்பை ஏற்று, மேடையில் குபீர்ச் சிரிப்பை எழுப்புகிறவர், மணக்கால் மணி. அவர் மிக்க மேடை அனுபவம் பெற்றவர். நாமும் அவர் நடிப்பில் சிரித்து அனுபவம் பெற்றவர்கள்.

நாடக ஆசிரியர் மா. ரா. நாடகத் துறையில் மட்டும் அல்லாமல், சினிமாத் துறையிலும் எழுதிப் பண்பட்டவர்; அவரது பண்பட்ட உழைப்பு நாடகத்தில் காட்சிக்குக் காட்சி பளிச்சிடுகிறது. சதீஷ் க்ரியேஷன்ஸ் தயாரிப்பான "கடமை அழைக்கிறது" நாடகத்தைப் 'பலே' என்று பாராட்டுமாறு நமது கடமை நம்மை அழைக்கிறது! — காந்தன்



இந்தியச் சிறுகதைத் தொகுப்பின் தமிழ் பகுதியில் இது முதலிடம் கொண்டதுடன், புத்தகத்தின் பெயராகவும் அமைந்துள்ளது — DER TIGER KONIG.

கல்கி வாழ்ந்த காலத்திலிருந்தே அவருடைய சிறுகதைகளை, டாக்டர் ராகவன், மஞ்சேரி ஈசுவரன் போன்றோர் ஆங்கிலத்தில் ஆக்கி வெளியிட்டு வந்திருக்கிறார்கள். அவற்றில் சஞ்சிகைகளில் வந்தவை நெடிய பட்டியல்.

தமது புத்தகங்கள் மட்டுமின்றி, பொதுவாகப் பலருடைய தரமான நூல்களும் பரவ வேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருந்தார் கல்கி. 1933ல் கே. வி. கிருஷ்ணசாமி அய்யர் தொடங்கித் தொடர்ந்து நடத்திய தமிழ்ப் பத்தகாலய இயக்கத்தில் அவரும் தொடர்ந்து ஈடுபட்டிருந்தார். அந்த இயக்கத்தின் ஒரு விளைவாகப் புத்தகாலயச் சட்டம் ஒன்றை, 1949ல் சென்னை சட்டசபை நிறைவேற்றியது. ஆனால் புதிய புத்தகசாலைகளை அமைப்பது, பழைய புத்தகசாலைகளுக்கு உதவி செய்வது போன்ற அதன் நோக்கங்கள் சீராக நிறைவேறாமல் சுணங்கவே, அரசாங்க இயந்திரத்தை முடுக்கி விடுவதற்காக, 1951 இறுதியில் புத்தகாலய மகாநாடு ஒன்று, டாக்டர் அழகப்ப செட்டியாரின் தலைமையில் நடைபெற்றது. அதற்கான ஏற்பாடுகளிலும், அதன் நடவடிக்கைகளிலும் ஊக்கத்துடன் கல்கி கலந்து கொண்டார். தமது பத்திரிகையின் மூலம் பிரசாரம் செய்தார். ''நல்ல புத்தகங்களைப் பிரசுரித்தல், புத்தகப் பிரியத்தை வளர்த்தல் ஆகிய இரண்டு காரியங்களும் ஏக காலத்தில் நடைபெற வேண்டும்'' என அவர் வற்புறுத்தி, அதற்கு வேண்டிய யோசனைகளைத் தெரிவித்தார்.

புத்தகப் பிரியத்தை வளர்த்தால் தானகவே புத்தக விற்பனை பெருகும். அந்த வகைக்குப் புத்தக மதிப்புரைகளைத் தனி அக்கறையுடன் தமது பத்திரிகையில் கல்கி வெளியிட்டு உதவி செய்தார்.

எவ்வளவு விரைவாக அந்த உதவியைச் செய்து வந்தார் என்பது பழனியப்பா பிரதர்ஸைச் சேர்ந்த குழந்தை எழுத்தாளர் ''ரத்னம்'' சொன்ன விவரம் ஒன்றிலிருந்து தெரிகிறது. அழ. வள்ளியப்பாவின் ''நல்ல நண்பர்கள்'' என்ற புத்தகத்துடன் கல்கியின் காந்தி நகர் வீட்டுக்கு ரத்தினம் சென்றாராம். புத்தகத்தைக் கல்கியிடம் கொடுத்து, அதற்கு மதிப்புரை வெளியிட வேண்டும் என்று இளைஞர் கேட்டுக் கொண்டதும், ''ஆபீசுக்குத் தபாலில் அனுப்பி யிருக்கலாமே?'' என்று கல்கி சொன்னாராம். ''உங்களைப் பார்க்க வேண்டும், என்ற ஆசையால் வந்தேன்.'' என்றாராம் ரத்னம். ''அப்படியானால் நன்றாகப் பாருங்கள்'' என்று கல்கி சிரித்துக் கொண்டே சொல்லி அவருடன் சிறிது நேரம் பிரியமாய் உரையாடினாராம்.

அந்தச் சந்திப்பு நிகழ்ந்ததற்கு அடுத்த (9–11–52) கல்கி இதழிலேயே ''நல்ல நண்பர்கள்'' புத்தக மதிப்புரை வெளியாயிற்று. அதுவும் ஆயிரக் கணக்கான வாசகர்கள் ஆவலுடன் படித்துக் கொண்டிருந்த ''பொன்னியின் செல்வன்'' தொடரின் அந்த வாரத்திய அத்தியாயத்துக்கு அடியில்.

அதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால், 3–12–50 தேதிய கல்கி இதழில், நமக்கு ஏற்கனவே தெரிந்த திருநாவுக்கரசு, குழந்தைகளுக்காக வெளியிட்ட சிறு சிறு நூல்கள் பற்றி ஒரு மதிப்புரை வந்தது. அந்த மதிப்புரையின் மதிப்பு அவரைத் திணற அடித்தது. ஓரணா முதல் மூன்றணா வரை விலை கொண்ட அந்த ''ஜில்ஜில்'' பதிப்பகப் புத்தகங்கள் உடனடியாகச் சுமார் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு விற்பனை ஆயின. தமது நன்றியைத் தெரிவிப்பதற்காகச் சென்ற திருநாவுக்கரசிடம், புத்தக வெளியீட்டுத் துறையில் மேலும் மேலும் முன்னேறுவதற்கு வேண்டிய யோசனைகளைக் கல்கி கூறினார். அவருடைய அலுவலகத்துக்குச் சென்றும் ஊக்கம் ஊட்டினார்.

பின்னர் பெரிய எடுப்பாகப் புத்தகங்களை வெளியிடத் திருநாவுக்கரசு திட்டமிட்டபோது முன்பு கல்கி செய்த உதவிகளை நினைவிற் கொண்டும், தமக்கு மிகவும் பிடித்த அவருடைய கதாநாயகியைப் போற்றும் வகையிலும் தமது நிறுவனத்துக்கு ''வானதி பதிப்பகம்'' எனப் பெயர் சூட்டினார். அதன் பிராபல்யம் காரணமாய் அவரே ''வானதி திருநாவுக்கரசு'' என்று பெயர் பெற்றுள்ளார்.

அவருடைய அலுவலக அறையில், அமரர் கல்கியின் உருவப் படம் அஞ்சலிக்கு உரியதாய்க் காட்சி அளிப்பதைக் காணலாம். (தொடரும்)

---

## கருத்தாழம்



வீட்டிலுள்ள குப்பைக் கூடையைக் காலி செய்யாதவர்கள்தாம் பெரும்பாலும் காற்றிலுள்ள அசுத்தம் பற்றிக் காரசாரமாகப் பேசுகிறார்கள்.

—ஹெரால்டு காபின்—ஆர்.எம்.

கதை:
கௌசிகன்
சித்திரம்:
ம.செல்வன்

# அறிவின் விலை ஒரு கோடி

12
















படகு கவிழ்ந்து கரையில் ஒதுங்கி இருக்கிறது. அந்த இந்தியர்களைப் பற்றிய தடயம் எதையும் காணுமே.


குபேர் நாத்தின் வீட்டில் ஹெலிகாப்டர் பைலட்டின் அறிக்கையைக் குபேரும் லில்லியும் கேட்கிறார்கள்.
அந்தப் புயலில் அவ்விருவரும் தப்பியிருக்க முடியுமென்று நான் நினைக்கவில்லை.
அந்தப் பெண் இறந்திருப்பாளானால் அவள் தந்தை விஷ்ணுப்பிரசாதிடம் நமக்கு எவ்வித பிடிப்புமில்லை. அவரைப் பணியவைக்க முடியாது.
அவள் இறந்து விட்டதாக அவரிடம் ஏன் கூறவேண்டும்? அவள் உடைமைகள் நம்மிடமிருக்கின்றன. அவைகளை அவரிடம் காட்டி, கைதி நம் வசமிருப்பதாகக் கூற வேண்டியதுதானே?


இதனிடையே சாருவும் மாதவனும் மலைப் பகுதியில்...
மாதவன் வழிகாட்டி என்ன கூறுகிறார்?
அவர்களால் இனி நம்மைத் தொடர முடியாது என்றும், இந்த வழியாகவே முன்னேறிப் போகும்படியும், குதிரைகளை ஒரு குறிப்பிட்ட கிராமத்தில் ஒப்படைத்து விடும்படியும் கூறித் தனக்கு விடை தருமாறு கேட்கிறார்.


நீண்ட பிரயாணத்துக்குப் பிறகு.
சாரு, இந்த மலைப் பிரதேசத்தில்தான் உன் தகப்பனார் மறைந்திருக்கிறார். நாம் அவரை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். இங்கு சமீபத்தில் ஒரு பாழடைந்த ஊரும் கோவிலும் இருக்கின்றன அங்கே தான்...
மனித நடமாட்டமே இல்லாத இந்த மலைப் பகுதியிலா? ஐயோ, அறிவை வளர்த்துக் கொண்ட அவருக்கு எவ்வளவு ஆபத்து?


இந்த பாகிஸ்தான் பகுதியில் இந்துக் கோயிலா?
என்ன சாரு, பாகிஸ்தான் தோன்றியது இப்போது தானே? ஒரு காலத்தில் இவையெல்லாம் இந்தியப் பகுதிகள் தானே?
ஓ! ஆமாமாம்... மறந்தே போனேன்.


சாரு, சூரியன் மலைவாயில் விழுகிறான். இரவை நாம் அதோ தெரியும் கிராமத்தில் கழிப்போம். நாளை உன் தகப்பனாரைச் சந்திக்க முடியும் என்று நம்புகிறேன்.

தொடரும்.

# மட்டம் தட்டு!

~ தராஜா ~

**மட்டம் தட்ட யாருக்குத்தான் பிடிக்காது? அதற்குச் சில யோசனைகள் — மட்ட மானவையல்ல; முதல் தரம்!**

கம்பெனி அதிகாரிகளின் மீட்டிங்கில் பலராமன் ஏதோ யோசனை ஒன்றைத் தெரிவிக்கிறார். நீங்கள்தான் முதலாளி. எப்படியெப்படியெல்லாம் அவரை மட்டம் தட்டலாம்?

(1) முகத்தில் ஏளனப் புன்னகையைத் தாராளமாக மலர விடுங்கள். பிறகு, ''சீரியஸாகத்தான் சொல்றியா? ... அல்லது ஜோக் அடிக்கிறியா?'' என்று கேளுங்கள். பலராமனுக்குப் பதில் கூறத் தெம்பே வராது.

(2) பிரமாதமான ஜோக்கைக் கேட்டு விட்டது போல் 'ஹொஹ்ஹொஹோ' என்று சிரிக்க ஆரம்பியுங்கள். முடியுமானால் சீட்டிலிருந்து எழுந்து, கையைத் தட்டிச் சிரித்து விட்டு உட்காருங்கள். பலராமன் சுருண்டு விழுவார்.

(3) ''அபாரம்! அற்புதம்! பிரமாதம்! ஒண்டர்புல்! யாருக்குமே இதுவரை இப்படித் தோன்றியதில்லை....! அடாடா! என்ன ஐடியா, என்ன ஐடியா!'' என்று ஆசாமியை ஆகாச உயரத்துக்குத் தூக்கி விடுங்கள்; அது போதும். பலராமனுக்கே உங்கள் புகழ்ச்சியைக் கேட்டுத் தன்னுடைய ஐடியா அவ்வளவு உசத்திதானா என்ற சந்தேகம் வந்து விடும்.

(4) ''ஐடியா இருக்கட்டும்... அதன்படி செய்ய வேண்டுமானால் அதற்கு எவ்வளவு செலவு பிடிக்கும் தெரியுமா?... உனக்கென்ன ஐடியா கொடுத்து விட்டாய்! பணத்துக்கு எங்கே போவது? ஏற்கெனவே பாங்கிலே கப்பறை ஏந்திக் கொண்டு நிற்கிறோமே அதை மறந்துவிட்டு ஐடியா கொடுக்க வந்து விட்டாயே!...'' என்று பலராமனைச் சாடுங்கள்!

(5) ''சரிதாம்பா!... இந்த ஐடியா நீ இன்றைக்குச் சொல்றாய். சரியாகப் பதினெட்டு வருஷங்களுக்கு முன்னாலேயே இதைப் பரிட்சை பண்ணிப் பார்த்துவிட்டு நமக்குச் சரிப்பட்டு வராது என்று விட்டு விட்டோமே! அது உனக்குத் தெரியுமா?'' என்று சும்மாவானும் சொல்லி வையுங்கள் போதும்! பலராமன் வாய் கப்பென்று அடைபட்டுப் போகும்!

(6) பலராமன் சொன்ன ஐடியாவுக்கு நேர் எதிராக இன்னொரு ஐடியாவை நீங்களே சொல்லி, ''இந்த ஐடியா எப்படி?'' என்று அவரையே கேளுங்கள். பலராமன் திரு திருவென்று விழிப்பார்!

(7) ''ஏம்பா பத்ரிநாத்!... இதே போல் ஒரு ஐடியாவைக் கொஞ்ச நாளைக்கு முன்னாலே நீ என்கிட்டே சொன்னே இல்லையா?'' என்று சும்மாவானும் இன்னொருவரைப் பார்த்துக் கேட்டு வையுங்கள். அந்தப் பத்ரிநாத்தும் காற்று தன் பக்கமாக வீசுகிறது என்று உணர்ந்து 'ஆமாம் சாமி' போடுவார். பலராமன் தம் ஐடியா காப்பி அடித்த ஐடியாவா என்று தமக்குத் தாமே குமைந்து கொள்வார். அப்புறம் எந்த ஐடியாவையும் சொல்வதற்கு முன்பு பத்துத் தடவை யோசிப்பார்.

(8) ''ஐடியா நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் சட்டப்படி இதை நாம் செய்ய முடியாது போலிருக்கே! நம்ம கம்பெனி வக்கீலைக் கேட்டுவிட்டுத்தான் முடிவு செய்ய வேண்டும்... எனக்கென்னவோ இது தேறும் என்று நம்பிக்கையில்லை...'' என்று சொல்லி, பலராமனின் உற்சாகத் தீயில் தண்ணீரைக் கொட்டுங்கள்.

(9) பலராமன் தம் ஐடியாவைச் சொல்லி முடித்தவுடன், ''உம்... அப்புறம்?'' என்று இரண்டே வார்த்தை கேளுங்கள். பலராமனுக்கு மேற்கொண்டு பேச நாவே எழாது.

(10) ''நம்ம பலராமன் ஒரு ஐடியாக் கொடுத்திருக்கார்... இது நமக்குச் சரிப்பட்டு வரும்னு எனக்குத் தோணலே... ஆனாலும், பாவம், ரொம்பச் சிரமப்பட்டு ஐடியா கொண்டு வந்திருக்கார்... ஒரு ஆறு பேர் கொண்ட கமிட்டி போடறேன்... அந்தக் கமிட்டி இந்த ஐடியாவைப் பரிசீலனை செய்து முடிவு சொல்லட்டும். அதன்படி செய்து விடலாம்'' என்று சொல்லிக் குழு ஒன்றை நியமியுங்கள். பலராமனின் ஐடியாவைக் குழி தோண்டிப் புதைத்துச் சிமிட்டி பூசும் வேலையைக் 'கமிட்டி' பார்த்துக் கொள்ளும்.

(''ஹௌ டு வின் த பிஸினஸ் பேட்டில்'' என்ற நூலைத் தழுவி எழுதியது.)



# படித்தோம் சொல்கிறோம்...



◀ ராஜாஜி கார்ட்டூன் — ரமணி

## ராஜாஜியின் கதை

சின்னக் கவுண்டன் ஆசிரமத்து வண்டிக்காரன். வீட்டுச் செலவுக்காக அவன் பலரிடம் கடன் வாங்கியிருந்தான். திருப்பிக் கொடுக்க முடியாத நிலை. கடன் கொடுத்தவர்கள் அனைவரும் நெருக்கினார்கள்.

அவன் நன்மையில் நாட்டம் கொண்ட பெரியவர் ஒருவருக்கு விஷயம் தெரியவே, கடன் கொடுத்தவர்களிடம் சொன்னார்: ''நீங்கள் எல்லோரும் அவன் தர வேண்டிய வட்டியை மட்டும் விட்டுக் கொடுத்து விடுங்கள். கடன் கொடுத்த தொகையை மட்டும் வாங்கிக் கொள்ளுங்கள்!'' என்று. அவர்களும் ஒப்புக் கொண்டார்கள்.

தாம் சொன்னதைச் செயலில் காட்டத் தாமே நண்பர் ஒருவரிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கிச் சின்னக் கவுண்டனின் கடன்களை யெல்லாம் அடைக்க வழி செய்தார்.

அரசியல் மேதையும் ஆட்சி முறையில் வல்லுநருமான ராஜாஜியின் இந்த நெறி முறை இன்றைய அரசியலுக்குத் தேவை.

இன்றைய சமூக வாழ்வில் எத்தனையோ பேர் கடன்பட்டு அல்லலுறுகிறார்கள் என்பதில் ஐயம் இல்லை. அவர்களுக்கு நிவாரணம் தேடித் தரவேண்டியதுதான். அதே நேரத்தில் கடன் கொடுத்தவர்களையும் காக்க வேண்டிய கடமையை எடுத்துக் காட்டுகிறது இந்த நிகழ்ச்சி.

ராஜாஜியின் கதை சிறார்களுக்காக எழுதப்பட்ட சிறு புத்தகமே ஆனாலும், பெரியவர்களும், குறிப்பாக நல்லாட்சி நடத்த விரும்புவோர்களும் படித்துப் பயன் பெறக் கூடிய சிறந்த புத்தகம்.

—ரா. வீ.

ஆசிரியர்: ரமணீயன். பிரசுரம்: நால்வர் நூலகம், 213, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1. விலை: ரூ. 3-00.

## ஜப்பானில் நான் கண்டதும் கேட்டதும்

நான்கு சுவர்களுக்குள் அமர்ந்து எழுத்தாளர்கள் 'கிணற்றுத் தவளை'யாக எழுதுவதை விட ஆயிரம் மைல்கள் சுற்றிப் பார்த்து விட்டு வந்து தங்கள் அனுபவங்களைத் தரும்போது அதன் சுவையே அலாதிதான் என்றார் மூதறிஞர் ராஜாஜி.

அச்சுத் தொழில், பாட நூல்களை வெளியிடுவதில் முன்னேற்றம் போன்றவை குறித்து யுனெஸ்கோ நிறுவனம் ஆண்டு தோறும் ஜப்பான் நாட்டில் இரண்டு மாதப் பயிற்சி ஒன்றைக் கடந்த ஆறு ஆண்டுகளாக நடத்தி வருகிறது. அந்தப் பயிற்சியில் இந்திய நாட்டின் சார்பாகக் கலந்து கொண்ட இந் நூலாசிரியர் தாம் ஜப்பானில் பார்த்தவைகளை, கேட்டவைகளை, சேகரித்தவைகளை ஓர் அழகிய பயண நூலாக வடித்துத் தந்திருக்கிறார்.

நம் நாட்டின் சிறப்போடு ஜப்பானை அடிக்கடி ஒப்பிட்டு நோக்குவது புதிய பாணியாக விளங்குகிறது:

''ஏறத்தாழ இரண்டாயிரம் கோயில்களையுடைய கியோட்டோவை ஓர் 'ஆலய' நகரம் என வழங்கினும் பொருந்தும். கோயில்கள் நிறைந்துள்ள காஞ்சிமாநகரை இதனுடன் ஒப்பிடலாம். அது டோக்கியோவிலிருந்து மேற்கே ஏறக்குறைய 330 கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது.''

ஜப்பானியரின் உழைப்பார்வம், ஜப்பானிய நகர்கள், கல்வி, பொருள் உற்பத்தியும் தொழில் வளமும், விளையாட்டுக்கள், விழாக்கள், சமயங்கள் என்று இந்நூலில் ஜப்பான் நாட்டை அலசு அலசு என்று அலசியிருக்கிறார்

ஜப்பானின் வித்தை நிறைந்த ஷியாட்சு மருத்துவ முறையைக் கூட விட்டு வைக்க



திரு சொக்கலிங்கம் ▶



லில்லை: '''மற்ற மருத்துவ முறைகளைப் போலவே விரல் அழுத்த மருத்துவமும் ஓர் ஆழமான சிறந்த மருத்துவ முறை' என்கிறார் நாமி கோஷி. உடலில் எல்லாப் பகுதிகளையும் விரலால் அழுத்திப் பார்ப்பதன் மூலம் இரத்த ஓட்டம், நீர்த் தேக்கம், முறைகேடான அகச் சுரப்பு, எலும்புக் கூட்டின் அமைப்பில் இருக்கும் கோளாறு, நரம்புகளில் இருக்கும் அளவுக்கு மீறிய அழுத்தங்கள் ஆகியவற்றை எளிதாகத் தெரிந்து கொண்டு அதற்கேற்ப மருத்துவத்தைத் தொடங்கலாம்.''



◀ செல்லப்பன்



நாம் ஜப்பான் நாட்டிலிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய பாடங்கள் நிறைய இருக்கின்றன; ஆனால் பரீட்சை என்று வைத்தாலொழிய நாம் எங்கே படிக்கிறோம்?

296 பக்கங்கள் கொண்ட இந்தச் சுவையான பயண நூலில் அழகிய வண்ணப் படங்களும் இடம் பெற்றிருக்கின்றன.

'பயண அனுபவங்களை ஒருவரால் இவ்வளவு சுவைபடச் சுந்தரத் தமிழில் கதை போல எழுத முடியுமா?' என்று வியக்கிறார் இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய திரு வடிவேல். 'சோவியத் நாட்டில் நான் கண்டதும் கேட்டதும்' நூல் எழுதி நேரு பரிசு பெற்றவராயிற்றே இந்நூலாசிரியர்? அவரால் ஆகாதது முடியாதது?

— பி. எஸ். எம்.

ஆசிரியர்: சொக்கலிங்கம். பிரசுரம்: ஹிக்கின்பாதம்ஸ் லிமிடெட், மவுண்ட் ரோடு, சென்னை—2. விலை ரூ. 20.00

## சிலம்பொலி

தமிழில் கிடைத்துள்ள மிகப் பழைய நாடக நூல் சிலப்பதிகாரமே. நாடகக் கலையின் இலக்கணத்தை நன்கு உணர்ந்து இயற்றப்பட்டுள்ள, முத்தமிழ்ச் சிறப்பையும் ஒருங்கே கொண்ட ஒப்பற்ற நூல் சிலப்பதிகாரம்.

இந்தச் சிறப்பை இந்நூலாசிரியர் ''நீல விதானத்து நித்திலப் பூம்பந்தர்க் கீழ்...'' என்ற முதல் அத்தியாயத்திலேயே விளக்குகிறார்.

நாடக ஆரம்பத்தில் நடிகர்கள் அனைவரும் சேர்ந்து பாடும் (Chorus) என்று ஆங்கிலத்தில் கூறப்படும் 'கூட்டப் பாட்டு' பற்றிய விளக்கம் குறிப்பிடத் தக்கது. ''திங்களைப் போற்றுதும், திங்களைப் போற்றுதும்...'' என்ற பாடல் நாடகப் பாத்திரங்கள் அனைவரும் சேர்ந்து பாடும் பாட்டு.

சிலப்பதிகாரக் காவியத்தை ஒரு நாடகமாகவே நிகழ்த்திக் காட்டுகிறார் ஆசிரியர். கோவலன்—கண்ணகி திருமணத்தை முதல் மங்கலக் காட்சியாக அமைத்து மேடையில் நடக்கும் நாடகத்தைப் பார்ப்பது போன்ற உணர்ச்சியை எழுப்புவது நன்றாக இருக்கிறது.

அருங் கலைகள் அனைத்திலும் தமிழர்கள் அடைந்திருந்த தேர்ச்சி எத்தகையது என்பதை அரங்கேற்று காதை நமக்கு நன்கு அறிவிக்கிறது. மாதவி நாட்டியம் ஆடிய அரங்கு எப்படி இருந்தது என்பதை இளங்கோவடிகள் கூறுவதைப் பார்ப்போம்.

> எழுகோல் அகலத்து எண்கோல் நீளத்து
> ஒருகோல் உயரத்து உறுப்பினது ஆகி
> உத்தரப் பலகையோடு அரங்கின் பலகை
> வைத்த இடைநிலம் நாற்கோல் ஆக ''

இதுமாத்திரம் அல்ல; அரங்கம் இருக்கும் இடம், அரங்கத் திரைகள், அரங்க ஒப்பனை ஆகியவை பற்றிய விவரங்கள் யாவும் இப்பகுதியில் நன்கு விளக்கப்படுகின்றன.

இந்நூலாசிரியரின் உரை நடையில் சிலம்பொலியின் நயத்தைக் கேட்கிறோம். சலசலத்து ஓடும் அருவியின் வேகத்தைக் காண்கிறோம். தீஞ்சுவைக் கனியின் தேன்சுவையை நுகர்கிறோம். சில இடங்களில் ஆடிக் காற்றின் வேகத்தையும் சில இடங்களில் தென்றல் காற்றின் சுகத்தையும் துய்த்து நுகர்ந்து ரசிக்க முடிகிறது.

சிலப்பதிகாரக் காவியத்தைப் பற்றிய அனைத்து விவரங்களையும் ஒன்றுகூட விட்டு வைக்காமல் ஆசிரியர் கூறியிருக்கிறார். கம்ப ராமாயணத்தோடு ஒப்புவமை காட்டி ஆசிரியர் தம் திறமையை மிகச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

— லோமாஸ்

ஆசிரியர்: சிலம்பொலி செல்லப்பன்; பிரசுரம்: அருணோதயம், ராயப்பேட்டை, சென்னை — 14; விலை: ரூ. 15-00.



அமரர் கல்கி ▶

## ஆனந்த ஓவியம்

நகைச்சுவை ஆனந்தம் அளிப்பதுதான், ரொம்பச் சரி, ஆனால் ஆனந்த ஓவியம்



என்றால்...? சாமானியச் சிரிப்புக்கும் கலை உணர்வு மிக்க நகைச்சுவைக்கும் வித்தியாச முண்டு. முன்னது வெறும் ஆனந்தம். பின்னது ஆனந்த ஒவியம்!

இப்படிக் கருதித்தானோ என்னவோ கல்கி அவர்களின் இந்தக் கட்டுரைத் தொகுப்பு நூலுக்கு ''ஆனந்த ஒவியம்'' என்று பெயர் கொடுத்தார்கள். இதுவரை புத்தக உருவில் வராத பழைய கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்துப் பிரசுரித்திருக்கிறார்கள், பாலரவி கம்பெனியார். கல்கி எழுதாத விஷயங்களே இல்லை. அவர் பேனாவின் பாராட்டுக்கோ தாக்குதலுக்கோ இலக்காகாத பிரபலஸ்தர்களும் கிடையாது. தாக்கப்படுபவரும் சிரிக்கும்படி செய்யக் கூடிய மந்திர சக்தி கல்கியின் எழுத்துக்கு உண்டு.

இந்த ஆனந்த ஒவியத்தில் வந்துள்ள ஹாஸ்யக் கட்டுரைகளிலிருந்து சில ரசமான பகுதிகளை இங்கு விண்டு கொடுத்து உங்களை மகிழ்விக்கலாமென்றால் அது நடவாத காரியம். காரணம் கட்டுரைகளின் ஒவ்வொரு வரியுமே ஆனந்தமயமானது. ஆகவே எதை விள்ளுவது? எதைத் தள்ளுவது? ஒட்டுமொத்தமாகப் படித்தால்தான் உங்களுக்குப் பூரண திருப்தி ஏற்படும்.

ஆனந்த ஒவியத்தின் கட்டுரைகளில் உள்ள அச்சுப் பிழைகளைக் காண முடியாதவாறு ஆனந்தக் கண்ணீர் மறைத்து விடுகிறது. கல்கி எழுத்தை எப்படியும் எல்லோரும் வாங்கி ரசித்து மகிழ்வார்கள் என்ற நம்பிக்கையில்தான் போலும் இந்தப் புத்தகத்தை மிகச் சாதாரணமாகத் தயாரித்திருக்கிறார்கள். அச்சும் அமைப்பும் இன்னும் கொஞ்சம் அழகாக அமைந்திருக்கலாமே என்று எண்ணாமல் இருக்க முடியவில்லை.

—கௌசிகன்

பாலரவி அண் கோ. சென்னை—24. விலை ரூ. 3-00.



அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பது போல, புதுமையாகப் புனைவதாக நினைத்துக்கொண்டு திரைக் கதையில் என்னத்தை யெல்லாமோ சேர்த்துக் குழப்பி விட்டார்கள்.

இன்ஸ்பெக்டராக வரும் முத்துராமன் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் திறன், சந்தேகப் பேய்க்கு இடம் கொடாத தனித்தன்மை ஆகியவற்றை மிகவும் மிடுக்காக நடித்துக் காட்டுகிறார். இன்ஸ்பெக்டர் மனைவியாக ஜெயசித்ரா ஏற்ற பாத்திரம் நல்ல நடிப்பை வெளிப்படுத்தும்படியான பாத்திரம். கயவன் ராஜு அவர்கள் வீட்டுக்கே வந்து தங்க ஆரம்பித்ததிலிருந்து மாலாவின் மனம் படும் பாடு. தன் மன வேதனை கணவனுக்குத் தெரியக் கூடாது என்பதற்காக அவள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவும் ஜெயசித்ராவின் நடிப்பாற்றலுக்கு உரைகல்லாக விளங்குகின்றன.

ஆரம்பக் காட்சிகளில் வேகம்காட்டிய ஸ்ரீகாந்த் அப்புறம் ஒரு நிதானம் காட்டியிருக்கிறார். அது பாயும் வேங்கையின் நிதானம் போன்றது.

தன்னைக் கெடுக்க வந்த கயவனைத் துப்பாக்கியால் கட்டுவிட்டு ஒரு பெண் தன்னந் தனியாகச் சடலத்தை நள்ளிரவில் கார் டிக்கியில் போட்டுக் கொண்டு மலைக் காட்டுக்குச் சென்று அதள பாதாளத்தில் உருட்டி விடுவதென்பது வெறும் சினிமாக் காட்சி. பயந்த சுபாவம் உள்ள ஒரு பெண் செய்யும் காரியமாயில்லை.

குமாரி பத்மினி வில்லனின் வைப்பாளாம். 'பாம்பே டையிங் டவ'லைக் கட்டிக் கொண்டு.... அவர் வருகிற இருப்பே நன்றாயில்லை. அசிங்கம்! செந்தாமரை, மேஜர் சுந்தரராஜன் இரு தகப்பனார்கள் - திரையுலகத்துப் பழகிப் போன தகப்பனார்கள்!

வி. கே. ராமசாமி, தேங்காய் சீனிவாசன் இருவரும் போலீஸ் ஸ்டேஷனில் அடிக்கும் கூத்துகள் - காமெடியல்ல - கண்ணாறாவி! நகைச்சுவைத் தித்திப்பு! ஆரூர்தாஸின் வசனம் சிறப்பா யிருக்கிறது. ஒளிப்பதிவு ரொம்ப ரொம்பச் சுமார்.

சாமுண்டி சித்ராவின் ''இன்ஸ்பெக்டர் மனைவி'' பத்தோடு பதினொன்று. அதில் சத்தாக எடுத்துக்கூற எதுவும் இல்லை!

- காந்தன்

# இன்ஸ்பெக்டர் மனைவி

படுக்கை வேளையில் பல் துலக்க நீங்கள்
மறந்திடும் ஒவ்வொரு நேரமும்...



# உலகமெல்லாம்
# பரவிப் பெருகியுள்ள
# நோயால் பீடிக்கப்படும்
# அபாயத்துக்கு உள்ளாகிறீர்கள்!

படுக்கை வேளையில் நீங்கள் பல் துலக்கத் தவறும்போது, பற்களைச் சிதைக்கும் கிருமிகள், இரவு நேரத்தில் உங்கள் வாயில் தங்கும் உணவுத் துகள்கள் மூலம் வளர்ச்சி அடைகின்றன. இதனால் நூற்றுக்கு 95 பேரைப் பாதித்து, வலிதரும் சோதனையாக மாறி, அவதி தரும் பற்சிதைவு நோய் பீடிக்கிறது.

## பினகா ஃப்ளோரைட் பற்சிதைவுக்கு எதிராக நீடித்த பாதுகாப்பளிக்கிறது

பற்சிதைவை 50 சதவிகிதம் வரை ஃப்ளோரைட் குறைக்கிறது என விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஆகவே தவறாமல் பினகா ஃப்ளோரைடினால், நாள்தோறும் காலையிலும், மீண்டும் படுக்கை வேளையிலும் பல் துலக்குங்கள். இதன் தனிப்பட்ட நீடித்து நிற்கும் ஆற்றல், இரவு பூராவும் உங்கள் வாயைச் சுத்தமாக வைத்திருக்கிறது. பற்களைச் சிதைக்கும் கிருமிகளின் வளர்ச்சியையும் வலிதரும் சோதனையையும் தடுக்கிறது.




**பல்லுக்கு உறுதி,**
**பற்சிதைவுக்கு எதிரி—**

# பினகா ஃப்ளோரைட்

U-BF/28/75 Tam

## 27

சில கணங்களுக்கு வீட்டில் பயங்கரப் பேய் அமைதி நிலவியது. தாயும் மகளும் ஒருவரை ஒருவர் பிடிக்காத பார்வையோடு பார்த்துக் கொண்டனர். சிறிது அமைதி அடைந்தபின், சுஷமாவுக்குத் தான் செய்தது சரியில்லை என்ற வருத்தம் ஏற்பட்டது. இருந்தாலும் அந்த நேரத்துக்கு அவளுக்கு அதைத் தவிர வேறு வழி தோன்றவில்லையே! அவள் பிறர் பார்வையில் என்ன, தன் பார்வையிலேயே தாழ்ந்து போனவள்தான் ! என்றாலும் தன் மகளின் வாய்மொழியாக எதையும் கேட்க அவளுக்குத் திராணியில்லை.

காதல் என்றால் அப்படி ஒரு தலைகால் புரியாத காதலா? அப்படியே காதலித்தாலும் சமூகத்தின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடப்பது தானே தனிப்பட்டவர்களின் கடமை ! அப்பொழுதுதானே சமுதாய வளர்ச்சி நல்ல படியாக அமையும் ? அவளைக் காதலித்தவன் நல்ல வேளையாக அப்படி ஒரு




நிகழ்ச்சி நடந்த பின்னும் அவளைக் கரம் பிடித்தானே, பிழைத்தாளோ? அப்படிச் செய்யாமல் அவன் அவளை நட்டாற்றில் விட்டிருந்தால்....?

அவன் அப்படிச் செய்யாதது அவனுக்குப் பெருமை. இருந்தாலும் பெற்ற பெண்ணை அவன் ஒதுக்கியது, பெற்றவள் பெயர் தெரியாமல் இன்னொருவரைக் கொண்டு வளர்க்கச் செய்தது அவனுக்குப் பெருமையா ?

நினைத்துப் பார்க்கவே நெஞ்சை என்னவோ செய்தது. தாயார் செய்த தவற்றைப் பெண்ணே எடுத்துக் கூறுவதென்றால்....? அதைக் கேட்க எப்படி மனம் வரும் ?

ரூபாவின் அழகிய, நிலைக்குத்தவிட்டு வெறித்து நின்ற கண்களில் நீர் பொங்கிப்

பெருகியது. அவள் உள்ளத்து வேதனையே நீராகப் பெருகி வடிகிறாற் போல் இருந்தது.

அவன் தன் தாயாரைப் பார்க்கத் தோன்றாமல் பார்வையைத் திருப்பிக் கொண்டான். அடுத்த நிமிஷமே வீட்டைவிட்டு 'விடுவிடு' என்று வெளியேறினான். அதைக் கண்ட சுஷமா அவனை இரண்டொரு முறை கூப்பிட்டாள். ஆனால் அவன் நிற்கவில்லை. சுஷமாவும் அவனைத் தொடர்ந்து இரண்டொரு அடி எடுத்து வைத்தாள். ஆனால் அதற்கு மேல் அவளால் முன்னேற முடியவில்லை; நின்று விட்டாள். அவனைத் துரத்திக் கொண்டு பின்னாலேயே சென்று தெருவாருக்கெதிரே ஒரு வேடிக்கைப் பொருளாகக் காட்சி தர அவளுக்கு விருப்பம் இல்லை. இரகசியம் அம்பலமானபின், பெண்ணைத் தடுத்து நிறுத்தும் சக்தியும் அவளிடம் இப்பொழுது இல்லை.

ரூபா போனபின், அவள் மெதுவாக ரோஸியின் அறைக்குச் சென்றாள். தரையில் விழுந்து கிடந்த தன் கடிதங்களைக் கண்ட பொழுது அவள் சொல்ல முடியாத வேதனையில் ஆழ்ந்து போனாள். ஏதோ ஒன்று உருண்டு உருண்டு வந்து தொண்டையை அடைத்தது. பல்லாண்டுகளாகப் 'பொத்திப் பொத்தி வைக்கப்பட்டிருந்த இரகசியத்தை இன்று அந்தக் கடிதங்கள் அம்பலமாக்கி அவளுக்கும் ரூபாவுக்கும் இடையே பெரிய விரிசலை அல்லவா ஏற்படுத்திவிட்டன. இனி என்னதான் மூடி மறைத்தாலும் விரிசல் விரிசல்தானே ?

அநூப் ரூபாவைப் பார்க்கப் பண்ணை வீட்டுக்குப் போன பொழுது, ஹர்நாம் மூலம் ரோஸி இறந்த செய்தி கிடைத்தது. அதைக் கேட்ட அவனுக்குச் சொல்லொணாதவருத்தம். இந்தச் சமயம் அவன் ரூபாவோடு அல்லவா இருக்க வேண்டும் ? இந்த எண்ணம் எழுந்ததும் அவன் சிம்லா புறப்படத் தயாரானான். சிறு பெட்டி ஒன்றில் இரண்டொரு துணிமணிகளை எடுத்துக் கொண்டு அவன் நேரே தமக்கையிடம் சென்றான்.

திடீரென்று அவன் சிம்லாவுக்குப் புறப்படுவதைக் கேட்ட பொழுது அவன் தமக்கைக்கு வியப்பாக இருந்தது. ஆனால் உண்மை நிலையை அறிந்த பொழுது அவளால் வாய் திறந்து மறுக்க முடியவில்லை. ரோஸியின் திடீர் மரணத்தினால் ரூபாவின் வாழ்க்கை துயரக் காடாகியிருக்கும் என்பதை எண்ணிப் பார்த்த சாரதாவுக்கு இதயம் நடுங்கியது. ஆனால், அவள் அநுபவம் மிகுந்தவள்; கெட்டிக்காரி, உலகம் பார்த்தவள். இந்த மாதிரித் தருணங்களில் மனிதன் உணர்ச்சி வசப்பட்டுச் செயற்கரிய செயல்களையும் செய்யத் துணிந்து விடுகிறான் என்பதை அவள் அறிந்திருந்தாள். என்ன சொன்னாலும் அநூப் இப்பொழுது நிற்கமாட்டான், பிடிவாதமாகப் புறப்பட்டே தீருவான் என்பதும் அவளுக்குத் தெரிந்த விஷயமே. அதனால் ''இரு. நானும் உன்னோடு வருகிறேன்!'' என்று வேறுவிதமாகக் காயை உருட்டினாள்.

''வேண்டாம், அக்கா! இந்தமாதிரி நேரங்களில் நீ வருவது சரியாக இராது!'' என்றான் அநூப்.

தமிழாக்கம்:
ரா. வீழிநாதன்



# மர்மச் சிறுகதைப் போட்டி

இந்த மர்மச் சிறுகதைப் போட்டியில் அறிமுக எழுத்தாளர்கள் மட்டுமே கலந்து கொள்ளலாம். அதாவது போட்டிக்குக் கதையை அனுப்பும்போது இவர்களது எழுத்து அச்சில் வந்திருக்கக் கூடாது. இதற்கான உறுதிமொழியுடன் தழுவலோ மொழிபெயர்ப்போ அல்ல என்பதற்கான உறுதிமொழியையும் சிறுகதையுடன் இணைக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு ... | ... ரூ. | 250.00 |
| இரண்டாவது பரிசு ... | ... ரூ. | 150.00 |
| மூன்றாவது பரிசு இரு கதைகளுக்கு ரூ. 100 வீதம் | ... ரூ. | 200.00 |

**முடிவு தேதி: ஏப்ரல் 30உ**

பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் இணைக்க வேண்டும். கடிதப் போக்குவரத்து கிடையாது. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 031**

"ஏன்? நீ மட்டும் போகவில்லையா?"

"என் விஷயம் வேறு, உன் விஷயம் வேறு!" என்று வெகு அலட்சியமாகப் பதில் கூறினான் அநூப்.

"என்ன சொல்கிறாய் நீ?"

"உன்னால் பொறுக்கவும் முடியாது, ஏற்கவும் முடியாது. இனி ரூபாவினால் தனித்திருக்க முடியாது."

"அவள் தனியாக எங்கே இருக்கிறாள்? க்ஷமாவின் வீட்டில் அவள் கவர்னெஸாகி விட்டாள் என்று நீதானே சொன்னாய்?"

"எத்தனை நாட்கள்தான் அவள் ஒரு வீட்டில் வெறும் கவர்னெஸாக இருக்க முடியும்? இனி அவள் என் கவர்னெஸ். என் உள்ளத்தை ஆள வேண்டியவள். என்னோடு வாழ வேண்டியவள்! இனி அவளைப் பிரிந்திருக்க என்னால் இயலாது!"

"பைத்தியம் பிடித்துவிட்டதா உனக்கு? உன் வீட்டு வேலைக்காரியை உன்னுடையவளாக்கிக் கொண்டு சமூகத்தில் என் மானத்தை வாங்க விரும்புகிறாயா? மக்களின் கேலிச் சொற்களுக்கு என்னை ஆளாக்க விரும்புகிறாயா? உலகம் என்ன சொல்லும், யோசித்துப் பார்த்தாயா?" குமைந்து வந்த ஆத்திரத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு கேட்டாள் சாரதா.

"உலகத்தைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. என் முடிவு உறுதியானது: இறுதியானது!"

"இதன் முடிவு என்ன என்று உனக்குத் தெரியுமா?" சீறினாள் சாரதா.

"தெரியும், நன்றாகத் தெரியும். உன் கணவரை உதறினாற்போல் உன் தம்பியையும் உதறிவிடுவாய். அவ்வளவுதானே?"

"அநூப்!" இரைந்து கூவிய சாரதாவின் தலை முதல் கால்வரை ஆடியது. "அப்படியானால் போகிறாயா, போ! குஷாலாகப் போ! தாராளமாகப் போ! என்றென்றைக்குமே போய்விடு! ஆனால் மாதக் கணக்கில் என் மனத்தை ஒரு சுமை அழுத்தி வருகிறதே, அதையும் உன்னோடு எடுத்துப் போ.....!"

"அக்கா!" அநூப் அயர்ந்து போய்க் கூவினான்.

"உன் அக்காவுக்குத் தன் கொள்கைகள் அனைத்தையும் காற்றில் பறக்கவிடும் துணிவு உண்டு. ஆனால் தகாத முறையில் பிறந்த ஒரு பெண்ணைத் தன் வீட்டு மருமகளாக ஏற்றுக் கொள்ளும் துணிவு மட்டும் கட்டுப் போகக் கினால்கூட அவளுக்கு வராது!"

அவள் மேலும் ஏதேதோ சொல்லத்தான் வாய் எடுத்தாள். ஆனால் அறையில் தங்கள் இருவரைத் தவிர மூன்றாமவர் ஒருவரும் இருப்பதாகப் படவே, சட்டென்று நிறுத்திக் கொண்டாள். திரும்பிப் பார்த்தால், — க்ஷமா! எத்தனை நேரமாக அவள் நிலைப்படியில் நின்று கொண்டு அவர்களுடைய பேச்சைக்கேட்டுக் கொண்டிருந்தாளோ தெரியாது!

சாரதா அவளைப் பார்த்ததும் வெட்கத்தால் குன்றிப் போய்விட்டாள். அநூப் தன் பெட்டியைத் தூக்கிக்கொண்டு அறையை விட்டு வெளியேறினான். அன்று அவன் க்ஷமாவுக்கு வணக்கம் சொல்லி வரவேற்பு கூடக் கூறவில்லை. அவன் உள்ளத்து நிலையைப் புரிந்து கொண்ட க்ஷமா மனம் மருகி மௌனமாக நின்றாள்.

"அவளை மன்னித்துவிடு, அக்கா!" தன் மௌனத்தைக் கலைத்து இச்சொற்களைக் கூறச் க்ஷமாவுக்கு வெகு நேரம் பிடித்தது.

# ஸாண்டல்வுட் நைஸில்*

## உங்கள் மேனியைப் பாதுகாக்க இதனினும் சிறந்த டால்க் இல்லை—அதுவும் இத்தனை சிறந்த நறுமணத்துடன்.




ஸாண்டல்வுட் நைஸில்—இதிலிருந்து நீங்கள் பெறும் நன்மைகளை வேறு எந்த சாதாரண டால்கம் பவுடரும் தருவதில்லை. உங்கள் மேனிக்கு ஆண்டு முழுவதும் அருமையான பாதுகாப்புத் தரவல்ல விசேஷப் பொருட்கள் அடங்கியது நைஸில் ஒன்றுதான். துர்நாற்றம் வீசச்செய்யும் கிருமிகளைக் கொல்ல வல்ல குளோர் பென்ஸீன். வியர்வையை முற்றிலும் உறிஞ்ச வென்றே விசேஷ முறையில் உருவாக்கப் பட்ட இந்த பவுடர்—உங்கள் மேனி மீது அதிக நேரம் நீடித்து நிற்கிறது. சிந்தை குளிர்விக்கும் சந்தன மணம்...புத்துணர்வை உங்கள் மீது வாரியிறைக்கிறது.

மயக்கும் சந்தன மணம். நாளெல்லாம் நீடித்த புத்துணர்வு. ஆண்டில் 365 நாட்களும் புதுமை உணர்வு.



**ஸாண்டல்வுட் நைஸில்*—உங்கள் மேனிக்கு உகந்தது**

ஸாண்டல்வுட் **நைஸில்** மருந்து குணங்களடங்கிய பவுடர் **க்ளாக்ஸோ** தயாரிப்பு

*டிரேடு மார்க்

# மாகோ பெஸ்டிஸைடுகள்
## உயர்ந்த தரமாகவும் விலை குறைவாகவும் இருப்பதற்கு 5 சிறந்த காரணங்கள் உள்ளன




மாகோ பொருள்கள் தரத்திலும், விலையிலும், உபயோகிப்பவர்களுக்கு சீராக உள்ளன

MACCO

**மைசூர் அக்ரோ கெமிகல் கம்பெனி**
அன்சாரி ரோடு, பந்தர், மங்களூர்
தந்தி: Mychem • போன்: 7062, 7036 • டெலெக்ஸ்: 082 - 226

---




# அய்யங்கார்ஸ்
## காபி கம்பெனி



தலைமை ஆபீஸ்:
45, சுவாமி நாயக்கன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை
சென்னை-600002
(போன்: 24131)

கிளை:
15, தெற்கு மாடவீதி,
மயிலாப்பூர்,
சென்னை-600004
(போன்: 76773)

ஏஜன்ஸி:
சாந்தி & கோ.,
18, உஸ்மான் ரோடு,
தி.நகர், சென்னை-600017
(போன்: 446387)

''முடியாது, ஒரு நாளும் முடியாது! நான் பிடிவாதக்காரி. சொன்னால் சொன்னது தான். என் சொல்லைக் கேளாமல் ஏடாகூடமாக அவன் ஏதாவது செய்து வைத்தால், என் கணவரைத் துறந்தது போல் அவனையும் துறந்து விடுவேன். என் முடிவில் மாற்றம் இராது!''

''ஆனால் இந்தத் தடவை பிடிவாதம் வேண்டாம். சொல்வதைக் கேள். நீ உன் அன்புக்கு அன்பான தம்பியையும் இழந்து விட்டால், இவ்வுலக வாழ்க்கை உனக்கு நரக வாழ்க்கை ஆகிவிடும். நாதியற்று நிராதரவாகிப் போவாய். உயர்வு தாழ்வை மறந்துவிடு. சமூகத்தின் பொய்மை மிகு சம்பிரதாயங்களைத் துறந்துவிடு. சமூகம் எழுப்பியிருக்கும் பகட்டுச் சிங்காரக் கோபுரங்களைத் தகர்த்து விடு !''

''முடியாத காரியம், க்ஷமா! நிலைமையை உனக்கு எப்படிப் புரிய வைப்பது? மிக மிக தர்ம சங்கடமான நிலை! நீ சொல்வது நடக்காத காரியம் !''

'' நடக்காத காரியத்தையும் நடக்க வைப்பதுதான் மனிதனது காரியம். அதுவும் சமூகச் சீர்திருத்தத்துக்காக நீ இரவு–பகல் பாடுபடுபவள். யோசிக்காதே ! தைரியமாக இந்த உபகாரத்தைச் செய் ! அவர்கள் இருவருடைய காதலையும் சாவாது நிலைக்கச் செய்வது உன் கையில் இருக்கிறது. ரூபா யாருக்கோ தகாத முறையில் பிறந்தவள் என்பதை மறந்துவிடு!'' இதைக் கூறும்பொழுது க்ஷமாவுக்கு மூச்சுத் திணறியது; கண்களில் கண்ணீர் பெருகி வந்தது !

''உனக்கும் பைத்தியம் பிடித்துவிட்டதா, என்ன ! நீ என்ன சொல்லுகிறாய், சகி ?'' என்று கேட்ட சாரதா அவள் உடல் நடுங்குவதைக் கண்டாள், அவள் கண்ணீர் கூறும் சோகக் கதையைப் புரிந்து கொள்ளத் தெரியாதவளாகத் திக்கு முக்காடிப் போனாள்.

க்ஷமா தனது கனத்த இமைகளைக் கஷ்டப்பட்டு உயர்த்திச் சாரதாவைப் பார்த்தாள். பிறகு வெட்கத்தினால் விழிகள் தாழத் தன் வாழ்க்கையின் இரகசியத்தைத் தன் ஒரகத்திக்கு எதிரே விண்டு வைத்தாள்.

ரூபா க்ஷமாவின் பெண் என்பதை அறிந்த சாரதா கல்லாகிப் போனாள். அவளுக்குத் தன் வாழ்நாள் முழுவதும் செய்த பெரும்தவம் ஒரு நொடியில் தவிடுபொடியாகி விட்டதாகத் தோன்றியது. எனவே, சாரதா வாய் அடைத்துப் போனாள். க்ஷமாவோ வெட்கத்தினால் தலை நிமிரவில்லை. என்றாலும், பல்லாண்டு பல்லாண்டுகளாக மனத்துள்ளேயே மறைத்து வைத்து மருகி வந்த ரகசியத்தை வெளியே கொட்டிவிட்டதன் மூலம் மாபெருஞ்சுமை தன்னைவிட்டு இறங்கிவிட்டாற்போல் உணர்ந்தாள். ஆகவே, அவள் சாரதாவின் மௌனத்தையும் மனக் கலவரத்தையும் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், ''ரூபாவின் வாழ்வில் பெரும் புயல் வீசி அலங்கோலப்படுத்தி விட்டது. தான் யாருடைய மகள் என்பது அவளுக்குத் தெரிந்து போய்விட்டது. ரோஸியின் மரணத்தினால் ஏற்பட்ட அதிர்ச்சியில்

''ரேடியோ சமையல் 'நிகழ்ச்சி கேட்டு நீ என்னமோ ஸ்வீட் செஞ்சிருக்கிறியாமே.... கொஞ்சம் கொடு!''

''அதை எப்படித் திங்கணும்னு ரேடியோவில் சொல்லலையே !''



அவள் பைத்தியமாகவே ஆகிவிட்டாள். அவளுக்கு இந்த உலகப் பற்றே விட்டுப்போயிற்று. அவள் வாழ்க்கையில் ஒரு புதுத் திருப்பம் ஏற்படாவிட்டால், அவள் சாவைத்தான் வரவேற்பாள். அவளைக் காப்பாற்ற வேண்டியது உன் பொறுப்பு. தயவுசெய்து அவள்மீது இரங்கி அவளுக்கு உயிர்ப் பிச்சை கொடு !'' என்று காலைப் பிடிக்காத தோஷமாகக் கெஞ்சினாள்.

''ஆனாலும் அவள் வாழ்வை நான் எப்படிக் காப்பாற்ற முடியும்?''

''அநூப்பின் அன்பை அவளுக்குத் திரும்ப வழங்குவதனால் !''

சாரதா பேசவில்லை. க்ஷமா அவள் காலடியில் மூர்ச்சை இழந்து விழுந்து விட்டாள். பாவம், அவள் உள்ளம் என்ன பாடுபட்டதனால் இந்த நிலையை அடைந்தாளோ? அந்த உணர்வை அவள் மனம் எடை போடலாயிற்று. ஆயினும் அவளால் சட்டென்று ஒரு முடிவுக்கு வர முடியவில்லை ! பாழும் தன் மானம் குறுக்கிட்டு அவள் மனத்தைத் தடுமாற வைத்தது!

ரூபாவைத் தேடிக் கொண்டு அநூப் அவளுடைய கல்லூரியை அடைந்தபொழுது ஸிஸ்டர் தெரெஸாவின் அறைக்கு வெளியே மாணவிகள் பலர் குழுமியிருந்தனர். அவன் அந்தக் கூட்டத்தைப் பார்த்து நின்றான். மாணவிகளின் முகங்களை மிகக் கவனமாக உற்று நோக்கினான். அவன் பார்வை ரோஸ்லின் மீது விழுந்ததும் கும்பலைக் கிழித்துக் கொண்டு அவளை நெருங்கினான். டாக்டரும் நர்ஸ்களும் பரபரப்போடு இங்குமங்கும் ஓடிக் கொண்டிருப்பதைக் கண்ட அவனுக்குத் தன்னை அறியாத பயம் ஒன்று ஏற்பட்டது. ''ரோஸ்லின் ! என்ன விஷயம்? ஏன் இந்தக் கும்பல்? ஏன் இந்த டாக்டரும் நர்ஸ்களும்?'' என்று கேட்டான்.

''உங்கள் ரூபா...'' அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. அவள் கண் இமைகளைக் கண்ணீர் நிறைத்தது.

'' என்ன ஆயிற்று, என் ரூபாவுக்கு ?''

''நேற்று மாலை அவள் தூக்க மாத்திரைகளைத் தின்றுவிட்டு நீர் அருவியின் குளிர்ந்த நீரில் போய்ப் படுத்துக்கொண்டு விட்டாள்.''

அதற்கு மேல் கேட்கும் திராணி அநூப்புக்கு இல்லை. பிரமை பிடித்தாற்போல் அப்படியே கண்களைச் சுற்றிக் கொண்டு வரவே, தலையைப் பிடித்துக் கொண்டான். (தொடரும்)



டெலிவிஷனுக்காக ஆபரேஷன் தியேட்டரில் படம் பிடிக்கப்படவிருந்தது. டைரக்டர் சொன்னார்: ''நான் கட் என்று சொன்னால் காமிராவைத் தான், நோயாளியை அல்ல. கவனமிருக்கட்டும்.''

— எம். சாம்பமூர்த்தி

# முதன்முதலில் ஸ்டீல் வார்ட்ரோப்



# தயாரித்தளித்தது கோத்ரெஜ்

# இன்றும் மிகச்சிறந்தவை கோத்ரெஜ் தயாரிப்பே!

- வழக்கமான ஸ்டோர்வெல்லை-விட கூடுதலான அகலம் மற்றும் உள் அகலம், எனவே கூடுதல் இடவசதி. ஆகவே ஆடைகள் மடிப்பு குலையாது.
- அட்ஜஸ்ட் செய்யக் கூடிய ஷெல்ப்புகள்.
- லாக்கருக்குக் கீழே (நீங்கள் விரும்பினால்) இன்னுமோர் துணி தொங்கவிடும் ராட்.
- முழு உருவம் காட்டும் ஆள் உயரக் கண்ணாடி. (நீங்கள் விரும்பினால்)
- கூடுதல் பாதுகாப்பிற்கு இறுக மூடும் லாக்கர்.
- கதவிற்கு உள்ளே, மேலும் கீழும் இன்டர் லாக் செய்து கொள்ள மும்முனை போல்ட்டிங் அமைப்பு.
- வெளிக்குத் தெரியாத கீல்கள்.
- லாக்கரிலும் கதவிலும் மாற்றுச் சாவியால் திறக்க முடியாத கோத்ரெஜ் பூட்டுகள்.
- நீடித்து நிற்கும், துருப்-பிடிக்காத, பளபளப்பு மங்காத மூன்று வண்ணங்கள்.

**அத்துடன் ஈடிணையற்ற கோத்ரெஜ் தரச் சிறப்பு.**

Godrej

**உன்னதமான தயாரிப்புகளுக்கு ஒப்பற்றது— கோத்ரெஜ்**

# அவருக்கு இன்

காப்பி குடித்துவிட்டு வெளி வராந்தாவுக்கு வந்தார். பேப்பர் பையன் பேப்பரை வைத்துவிட்டுப் போகும் மூக்காலி காலியாயிருந்தது.

நேற்று தீபாவளி. (இப்போது கூடச் சுற்றுப் புறங்களிலிருந்து பண்டிகையின் பிற்சேர்க்கையாகப் பட்டாசுச் சத்தம் அவ்வப்போது வந்து கொண்டிருந்தது.) தீபாவளிக்காக நேற்று பத்திரிகை ஆபீஸ்களுக்கு விடுமுறை. ஆகவே இன்று காலை செய்தித்தாள் கிடையாது.

அவர் அங்கிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். மூக்காலியின் வெறுமையைக் கை தடவியது. இன்று பேப்பர் இல்லை. மனமே சூனியமாகத் தெரிந்தது. பிரதமரின் புதிய அறிக்கைகளையோ லிஸ்பனில் கம்யூனிஸ எதிர்ப்புக் கிளர்ச்சியையோ அங்கோலாவின் அன்றைய அரசியல் நிலவரத்தையோ உடனடியாய்த் தெரிந்து கொள்ளாவிட்டால் தலை வெடித்து விடும் என்பதல்ல. அதற்கு வானொலியில் கூடச் செய்தி கேட்டுக் கொள்ளலாம். காலைச் சிற்றுண்டியும் காப்பியும் உட்கொண்ட பிறகு மதிய உணவுக்கு உட்காரும் வரை பேப்பர் படிப்பதில் நேரத்தைச் செலுத்துவது அவருடைய அன்றாட வழக்கம். இன்று அது முடியாது. அவருடைய நாளின் அமைப்பில் இது ஒரு பொத்தல். இந்தப் பொத்தலை எப்படி நிரப்புவதென்று தெரியவில்லை. பொது விடுமுறை விடும் நாட்கள் வந்தாலே மறுநாள் காலை அவருக்கு இந்தப் பிரச்னைதான்.

அவர் கடிகாரத்தைப் பார்த்தார். அதில் முட்கள் இல்லாதது போல் நேரம் உறைந்திருந்தது. இத்தனை நீண்ட நேரமும் ஒரு பத்து நிமிஷம்தானா?

அவர் வெளி கேட்டில் வந்து நின்று வீதியைப் பார்த்தார். மாநகராட்சித் தொழிலாளி ஒருவன் தெருக் குப்பைத் தொட்டியிலிருந்து குப்பையை அள்ளி அள்ளி வண்டியில் போட்டுக் கொண்டிருந்தான். கூடைகளிலும் கை வண்டிகளிலும் காய் சுமந்து கறிகாய்க்காரர்கள் தம் வியாபாரத்தில் மும்முரமாய் ஈடுபட்டிருந்தார்கள். வீட்டில் வேலை செய்யும் பச்சையம்மா நேரம் ஆகி விட்டதே என்று ஓட்டமும் நடையுமாய் அந்த வீட்டை நோக்கி விரைந்து கொண்டிருந்தாள். பத்துப் பன்னிரண்டு வயதிருக்கக்கூடிய ஒரு சிறுவன் ஒவ்வொரு கையிலும் ஒரு டிப்போ பால் புட்டியுடன் எங்கேயோ அவற்றைக் கொடுக்கப் போய்க் கொண்டிருந்தான்.

உலகமே 'பிஸி'யாய் இருக்கிறது.. அதை ஒரு சோம்பேறியாய்ச் சும்மா நின்று வேடிக்கை பார்ப்பவனாகத் தம்மை உணர்ந்த போது சட்டென்று ஒரு கூச்சம் உறைக்க, உள்ளே வந்துவிட்டார். சற்று நேரம் ஹாலில் நின்று மேலும் கீழும் பார்த்தார்; உட்கார்ந்தார். மூக்காலி இப்போது முன்பைவிட அதிகக் காலியாய்த் தெரிந்தது.

பேப்பர் இல்லாதது கை ஒடிந்த மாதிரியல்லவா இருக்கிறது?

இப்போது என்ன செய்யலாம்? பொழுதே போகவில்லையே. மதிய உணவுக்குப் பிறகு பிற்பகலில் படிக்கும் லைப்ரரிப் புத்தகங்களை இப்போது படிக்கலாமா? போய் ஒன்றை எடுத்துக் கொண்டு வந்து உட்கார்ந்தார். மூக்குக் கண்ணாடியை நிமிர்த்துக் கொண்டு அடையாள அட்டையின் இடத்தில் புத்தகத்தைப் பிரித்தார். இரண்டு மூன்று முறைகள் படிக்க முயன்றும் முடியவில்லை. மத்தியானத்தில் எவ்வளவு சுலபமாய் ஓடுகிற படிப்பு! 'இது என்ன நேரம் இல்லை' என்று சொல்வது போல் அல்லவா இப்போது புத்தகம் மூளையில் நுழைய மறுக்கிறது?

வழக்கங்களின் நியதிக்கு இவ்வளவு தூரமா அடிமையாகி விட்டோம் என்று எண்ணிய போது ஒரு ரோசம் எழுந்தது. பிடிவாதமாய் நான்கு பக்கங்கள் படித்தார். வழக்கம்தான் வென்றது. படிப்பு ஓடவில்லை. புத்தகத்தை மூடி வைத்தார்.

சக்கையாய்ப் போர் அடிக்கிறதே.

அவர் எழுந்து உள்ளே போனார். சமையலறையில் மருமகளோடு ஏதாவது பேசிக் கொண்டிருந்து சிறிது நேரத்தை கடத்தலாம்.

''என்னம்மா, நேத்து இருமிண்டிருந்தியே, இப்போது எப்படி இருக்கு?''

''தேவலை மாமா!'' அவள் அம்மியில் அரைத்துக் கொண்டே பதில் சொன்னாள்.

''உடம்பைப் பார்த்துக்கோ. குளிர்காலம்.. சட்டுன்னு ஏதாவது வந்துடும்.''



# வேலையில்லை

ஆர். சூடாமணி

''ஆகட்டும்.'' காஸ் அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்த சாம்பாரை அவள் கரண்டியால் கிளறி விட்டாள். பிறகு அம்மியில் அரைத்து முடித்துவிட்டு அவரைத் தாண்டிக் கொண்டு சாப்பாட்டு அறைக்கு வந்து அங்கிருந்த ஒரு தேங்காய் மூடியை எடுத்துப் போய் அரிவாள் மணை தலையில் வைத்துத் துருவத் தொடங்கினாள்.

''நான் வேணும்னு துருவித் தரட்டுமா?''

''வேணாம் மாமா! பரவாயில்லே'' அவள் தலை நிமிர்ந்து அவரைப் பார்த்துப் புன்னகை செய்து விட்டு மீண்டும் வேலையில் ஆழ்ந்தாள்.

''இன்னிக்கு என்ன கறி பண்ணப் போறே? முட்டைக் கோசா?''

''இல்லே, பீன்ஸ். அதுக்குச் சேர்க்கத்தான் இந்தத் தேங்காய்த் துருவல்!'' அவள் துருவி முடித்து அரிவாள் மணையைச் சாய்த்துச் சுவரோரமாய்த் தள்ளியபின் அவரைத் தாண்டிக் கொண்டு மறுபடியும் சாப்பாட்டு அறைக்கு வந்தாள். அங்கு ஒரு மேஜைமேல் தட்டில் பீன்ஸ் நறுக்கி வைக்கப்பட்டிருந்தது. அதை எடுத்துக் கொண்டு சமையலறைக்குத் திரும்பினாள். சற்று நேரத்துக்கு முன்பு தாம் வந்திருந்தால் காயை நறுக்கிக் கொடுத்து அவளுக்கு உதவியிருந்திருக்கலாம் என்று அப்போது அவருக்குத் தோன்றியது. சமையலறைக் கதவருகில் அவள் உடம்பைச் சுருக்கிக் கொள்ள வேண்டியிருந்ததையும் கவனித்தார். அப்போதுதான் அவளும் ஒரு வேலையில் மும்முரமாயிருப்பதும் தாம் அதற்கு இடைஞ்சலாய் இருப்பதும் உணர்வாகியது. வாசலுக்குத் திரும்பி விட்டார்.

சிறிது நேரத்தில் மகன் வேலைக்குக் கிளம்பினான். பேத்தியும் பேரனும் அவசரமாய்ச் சாப்பிட்டு விட்டுக் கையில் ஒற்றைப் புத்தகத்துடன் கல்லூரிக்குப் போனார்கள்.

அவசரம். மற்றவர்களுக்குத்தான். அவருக்கு இல்லை. மற்றவர்களின் கடிகாரத்தில் முட்கள் உண்டு. எல்லாருக்கும் ஏதோ ஒரு வேலை இருக்கிறது. செய்ய ஒரு கடமை, போக வேண்டிய ஓர் இடம். அவர்தான் வேலையற்றவர். பாம்பு பாம்பாக நீளும்பொழுதைக் கொன்றாக வேண்டும். பொழுதைக் கொல்வது என்ற தொடரைக் கண்டு பிடித்துச் சொன்னவன் வாய்க்குச் சர்க்கரைதான் போட வேண்டும்.

அந்த நாசமாய்ப் போகிற பேப்பர் வந்திருக்கக் கூடாதா?

இப்போது என்ன செய்யலாம்?

ஒரு நியூஸ் பேப்பர் வராததால் இப்படித் தவித்துப் போகும்படி ஒரு நிலையா?

மனைவியை இழந்த கிழவர்கள், உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றவர்கள். உலகத்தில் வேறு யாருமே இல்லையா என்ன? அவருக்கு மட்டும் ஏன் இந்தப் பிரச்னை?

அரசாங்க உத்தியோகம். ஆபீசை விட்டால் வீடு, வீட்டை விட்டால் ஆபீஸ். அந்த ஹோதாவில் ஏற்பட்ட சில நண்பர்கள். அவர்களை நண்பர்கள் என்பதை





### பெண்கள் ஆண்டு தொடர்கிறது...

புதுடில்லி சிட்டி பஸ் ஒன்று காலியாக வந்தது. ஆண், பெண் இரண்டு இடங்களுமே காலி. ஒரு ஸ்டாப்பில் நிறையப் பெண்கள் ஏறி அவர்கள் பெண்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களில் உட்காராமல் ஆண்கள் வழக்கமாக உட்காரும் இடங்களில் உட்கார்ந்தனர். கொஞ்ச நேரத்தில் 'லேடீஸ்' சீட் தவிர மற்ற இடங்களில் பெண்கள் உட்காரவும் ஆண்கள் நின்று கொண்டிருந்தனர். ஓர் ஆண் பிரயாணி தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, 'பெண்கள் ஏன் லேடீஸ் சீட்களில் உட்காராமல் ஆண்கள் இடத்தில் உட்கார வேண்டும்?' என்று கேட்டார். பெண்கள் எழுந்திருக்க மறுத்து விட்டனர். கண்டக்டர் சொல்லியும் பயனில்லை. 'எங்களுக்கு ஸ்பெஷல் சீட் ஒன்றும் தேவையில்லை' என்றனர். 'சரி' என்று அந்த ஆண்கள் 'லேடீஸ்' சீட்களில் உட்கார்ந்து விட்டனர். அடுத்த ஸ்டாப்பில் சில பெண்கள் ஏறினர். அவர்கள் வந்து 'லேடீஸ்' சீட்டைக் காலி செய்யச் சொன்னார்கள். அங்கு உட்கார்ந்திருந்த ஆண்கள் மறுத்துவிட்டனர். அந்தப் பெண்கள் கண்டக்டரிடம் புகார் செய்து சீட்டைக் காலி செய்து தரும்படி கேட்டனர். ஆண்களும் முணுமுணுத்துக்கொண்டே எழுந்து இடம் கொடுத்தார்கள்.

பெண்கள் ஆண்டு முடிந்துவிட்டது என்று யார் சொன்னது?

பாபு - உமன்ஸ் எரா

---

விட உத்தியோகபூர்வமான தொடர்புகள் என்று சொல்வதுதான் பொருந்தும். எனவே உத்தியோகத்தோடு அந்தத் தொடர்புகளும் முடிந்து போயின. கிளப்புகளில் ஏற்பட்ட அறிமுகங்களும் அவ்வளவுதான். வாலிபத்தில் டென்னிஸ் நண்பர்கள், வயதான பின் பிரிட்ஜ் நண்பர்கள். கிளப்புக்கு வெளியே தொடராத உறவுகள். தனிப்பட்ட முறையில் ஆத்மார்த்தமாய் நெஞ்சோடு நெருங்கி வரும் சிநேகிதர்கள்? யாருமே இல்லை. ஏன் அப்படி? அதுபோன்ற சிநேகிதர்களை அவர் ஏன் ஏற்படுத்திக் கொள்ளவே இல்லை? எத்தனையோ பேருக்கு வேலைக் காலத்தோடு சம்பந்தமில்லாத உண்மையான, நிலையான நண்பர்கள் இல்லையா? வாழ்வை ஆழமாக்கிக் கொள்ள, அர்த்தமுள்ளதாய்ச் செய்ய...

அதுதான் போகட்டும். 'பொழுதுபோக்கு என்றுவது ஏதாவதொன்று இருக்கக் - கூடாதா? தனிமையைப் பூப் பூக்கச் செய்யும் உள் மலர்ச்சியாக ஓர் ஈடுபாடு. சங்கீதம், ஓவியம், இவைகளில் வல்ல கலைஞராய் இருப்பது வேண்டுமானால் எல்லோராலும் முடியாமல் இருக்கலாம். ஆனால் அவற்றைச் சாஸ்திரபூர்வமாய் ஆராய்ந்து அதுபோன்ற ஒரு துறையில் — அல்லது தத்துவம், இலக்கியம் போன்ற ஏதாவதில் — நிறையப் படித்து நல்லதொரு ஞானத்தை ஏற்படுத்திக் கொள்ளக் கூடிய ஆர்வமாவது இருந்திருக்கக் கூடாதா? அவர் படிப்பவையோ வெறும் பொழுதுபோக்குத் துப்பறியும் கதைகள். படித்ததையெல்லாம் பத்தே நாட்களில் எவ்வித இழப்புணர்வும் இல்லாமல் மறந்து விடக் கூடியவை. பாட்டுக் கேட்டால் அதுவும் நேரத்தை ஒலியால் நிரப்பும் ஒரு சாதனமே தவிர இசையில் ஈடுபாடு கொண்டு வளர்த்துக் கொள்ளும் ஒரு மன ருசியல்ல. கலை ஓவியங்களைப் பார்த்தால் அது வெறும் பொம்மை பார்த்தல் தானே தவிர ஓவியங்கள் மூலம் அவற்றின் காலத்தையும் பல்வேறு பாணிகள் இயக்கங்களையும் பயின்று ஒரு முழுமையான 'ஸ்டடி'யாக் மனத்தை அர்ப்பணித்த கலைத் துறையல்ல. அப்படியெல்லாம் ஏதேனுமொரு பொழுது போக்கு — அவை கூட வேண்டாம், சாதாரணமாய்த் தோட்டக் கலையில் ஓர் ஆர்வம் — இருந்திருந்தால் கூட இப்படிக் காலில் கடிகாரம் கனக்கக் குறியின்றி மொத்தையாய் உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டாமே! நாளின் நியமத்தில் ஒரு துண்டு விழுந்தால் அதை நிரப்பக் கூட வகையறியாமல் இது என்ன இயலாமை? வாழ்வில் எவ்வளவு பெரிய வறட்சி இருந்தால் கேவலம் ஒரு நியூஸ் பேப்பர் இல்லாதது இத்தனை திகைப்பாகவும் சூனியமாயும் இருக்கும்!

மாடிக்குப் போய் ரேடியோவை முடுக்கினார். சென்னை நிலையத்தில் ஏதோ இலக்கியப் பேருரை. சீதையையும் கண்ணகியையும் பற்றிய ஒப்புநோக்கு போல் தோன்றியது. பேச்சாளர் சிலப்பதிகாரத்திலிருந்து சில வரிகளை ஒப்பித்தார். ஓர் இழவும் புரியவில்லையே! தொலைகிறது ... அவர் குமிழை நகர்த்தினார். ஓவென்று பேரிரைச்சல் காதை அறைந்தது. அலண்டு போய் ஒலியைக் குறைத்துப் பிறகு சரி செய்தார். யாரோ பாடகி ஒரு கீர்த்தனை பாடிக் கொண்டிருந்தாள். என்ன ராகம் இது? இனி நிறையக் கச்சேரிகள் கேட்டு இதைப் பொழுது போக்காக்கிக் கொள்ள வேண்டும் அவர் அந்தப் பாட்டுக்குப் பலமாகத் தலையாட்டிக் கொண்டு ஒரு கைமேல் இன்னொரு கையால் தாளம் போட்டார். சிறிது நேரத்துக்குப் பிறகு தான் அது தப்புத்தாளம் என்று புரிந்தது. ரேடியோவை அணைத்தார்.

இப்போது என்ன செய்யலாம்? சே, பேப்பர் வந்திருந்தால் இத்தனை அட்சய பாத்திர நேரமும் நிமிஷமாய்க் கடந்திருக்கும்.

கீழே இறங்கி வந்து பின்கட்டு ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டார். 'நான் எத்தகைய வீணன்' என்ற நினைப்பின் கண்ணாடியில் தம்மைப் பார்த்துக் கொண்ட போது மனம் முழுதும் கசப்பினால் நிறைந்தது. எங்கே போயிற்று அவர் வாழ்வெல்லாம்? கிழவி உயிரோடு இருந்திருந்தால் இருவருமாய்ப் பேசிக் கொண்டிருந்திருக்கலாம். இப்படி டல்லடிக்காது. ஆனால் அதற்கென்ன செய்ய முடியும்? உலகில் விதுரர்கள் எல்லோருமே இப்

## அருள்மிகு கூடலழகர் திருக்கோவில், மதுரை

# கும்பாபிஷேக விழா

### 4-4-76 ஞாயிறு காலை 8-36 முதல் 9 மணிக்குள்

பேரன்புடையீர்,

கூடல் மாநகரில் கோயில் கொண்ட கூடலழகர்,
பெரியாழ்வாரால் பாடல் பெற்ற கூடலழகர்,
திருமங்கையாழ்வாரால் பாடல்பெற்ற கூடலழகர்,
பாண்டியன் முன் ''பரம்பொருளுக்கு'' பொருள் தந்த கூடலழகர்,
பல்லாண்டால் ஏற்றம் பெற்ற கூடலழகர்,
நிழல் இடுமே விழா விமானத்தில் வீற்றிருந்து -
''வா''வென அழைத்து வரம்தரும் கூடலழகர்.

நூற்றெட்டு திருப்பதிகளில் முதன்மையான அருள்மிகு கூடலழகர் திருக்கோயில் திருப்பணி முற்றுப்பெற பொருள்களை வாரி வழங்கி சிறப்பித்து அருள்பெற வேண்டுகிறோம்.

குறிப்பு: நிதி அனுப்பவேண்டிய முகவரி:
செயலாளர் & பொருளாளர்: அருள்மிகு கூடலழகர் திருப்பணிக் குழு, மதுரை-1
ரு. 250/-க்குமேல் நன்கொடை அளிப்பவர்களுக்கு வருமான வரி விதிவிலக்கு, அரசு அளித்துள்ளது.

**திரு பி. ஏ. சி. ஆர். இராமசுப்பிரமணிய ராஜா, பி. எஸ்ஸி.**
தொழிலதிபர், தலைவர், திருப்பணிக்குழு

**என். சிவனாண்டி, பி. ஏ.**
நிர்வாக அதிகாரி, செயலாளர் & பொருளாளர்
அருள்மிகு கூடலழகர் திருக்கோவில், மதுரை

பாலாஜி

---

# ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் தயாரிப்புகள் வரிசையில்

மற்றுமொரு புதிய வகை —




## பிராண்ட் குறைந்த காரமுள்ள
# ஊறுகாய்கள் (எண்ணெயில்)

- ஆவக்காய் மாங்காய்
- மாங்காய்
- எலுமிச்சை
- கதம்ப காய்கறிகள்
- பச்சை மிளகாய் முதலியன

### 3-7 பிராண்ட் ஊறுகாய்களில்

குறைவான அளவில் காரமும், எண்ணெயும் சேர்க்கப்பட்டுள்ளதால்
வட இந்தியர்களுக்கும், மேலை நாட்டினருக்கும் சாலச் சிறந்தது

# ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.,

46, தம்பு செட்டித் தெரு (போன்: 20401) சென்னை-600001

படிச் சீட்டாட்டத்தில் டம்மிபோல் செய்வதற்கொன்றும் இல்லாமல் தேங்கித் தேங்கி உட்காருகிறார்களா?

ஒரு காலைப் பொழுதை நிறைக்கச் செய்தித்தாளின் உறுதுணை தேவை! அவர் வாழ்ந்த வாழ்வெல்லாம், இந்த அறுபத்தைந்து ஆண்டுகளும், கடைசியில் இப்படி ஒரு செய்தித்தாளை நோக்கித்தானா நகர்ந்து வந்திருக்கின்றன? இதுதானா குறிக்கோள்? அரிது அரிதென்று முழங்கும் மானிடப் பிறப்பின் சிகர நிலையாக இப்படி ஓர் அபத்தமா? நியதிகள் அவரை யந்திரமாய் இயக்கிச் செல்கின்றன. ஒரு சிறு நியதி தவறினாலும் நிலை குலைந்து போவதென்றால், அவ்வளவு தூரத்துக்கா அவர் ஒன்றுமே இல்லை? அப்படியானால் இந்த வறட்சி சாதாரணமானதல்ல, ஜீவனையே சார்ந்த வறுமை இது. அவர் வாழ்வு உள் நிறைவு, தனிமனிதத் தகுதி என்ற எவ்வித செல்வத்தாலும் வளமுறாத சத்தற்ற அர்த்தமற்ற வெறுமைதானே ஆகிறது? கல்லினுள் அகலிகையாய் மறைந்திருக்கும் நுட்பமான அழகுகள் எதையுமே உணராமல் வாழ்க்கை முழுவதையும் ஆழமின்றியே, எந்த மதிப்புகளையும் வளர்த்துக் கொள்ளாமலேயே, அற்பங்களால் நிறைத்தே, கடத்தி விட்டார், கடவுளே, எப்படிப்பட்ட இழப்பு!

அந்த நினைப்போடு வெளியே வெறித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கையில், இது போன்ற பிரச்னையின் போது எத்தனையோ நாட்கள் திரும்பத் திரும்பத் தோன்றியிருக்கும் இத்தகைய எண்ணங்கள் குபீரென்று ஒரு புதிய தீவிரத்துக்குக் கொழுந்துவிட்டுத் தாவ, கணப்பொழுதில் உணர்வில் ஒரு விசுவரூபம் நிறைந்தது. அவர் முன் உலகம் விரிந்தது. அதில் வாழும் மனிதன் வெறுமையின் வடிவாய் நின்றான். இன்பம், துன்பம், எண்ணம், செயல் எதற்குமே அர்த்தமில்லை. மனித வாழ்வே எவ்வித நோக்குமின்றிக் குருட்டு இயக்கங்களிலும் சாரமற்ற அற்பங்களிலும் மூழ்கிக் கரைந்து போகும் ஒரு நீண்ட, மகத்தான வியர்த்தம்.

சுரீரென்று அவர் உடல் முழுதும் சிலிர்த்தது, மனம் அதுவரை அநுபவித்திராத ஒரு பயங்கர உணர்ச்சியில் நடுங்கியது.

''மாமா! சாப்பிட வரேளா?''

உருவெளி கலைந்தாற்போல் அவர் சுயநிலை அடைந்தார். உடல் ஒருதரம் வேர்த்துத் தணிந்தது. சே, என்ன பைத்தியக்கார எண்ணங்களில் மூழ்கியிருந்து விட்டார்! பொழுது போகாமல் வெட்ட வெளியைப் பார்த்துக் கொண்டிருந்ததன் பலன். எதிரே நின்ற மருமகள், ''சாப்பிட எழுந்திருக்கலையா? நாழியாறதே'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள். சாப்பாட்டு நேரம் ஆகிவிட்டதா? அப்பாடா! இனி வழக்கமான அன்றாட நியமத்தில் நாள் ஓடிவிடும். சாப்பாடு, கதைப் புத்தகம், குட்டித் தூக்கம், மாலையில் நடை, கிளப் விஜயம், இரவு குடும்பத்தாருடன் அரட்டை, பிறகு படுக்கை ... அவருக்கு மூச்சு சுலபமாய் வந்தது.

''இதோ வரேன், அம்மா'' என்றவாறு மஞ்சலை விட்டு எழுந்தார்.

நாளைக் காலை பேப்பர் வந்து விடும். கவலையில்லை.

# சாதா அல்ல சாரதா!

அடையாறு கே. லக்ஷ்மணன், மாணவி தமக்குத் திருப்தி அளிக்கும் விதத்தில் தேர்ச்சி பெற்றாலன்றி அரங்கேற்றத்துக்கு இசைவு தர மாட்டார். செல்வி சாரதா மூர்த்தி அவருடைய மாணவி என்று சொல்லிக்கொள்ளும் தகுதியைப் பரிபூரணமாகப் பெற்றிருக்கிறார்.

செல்வி சாரதா சமீபத்தில் பக்திச் சுவை ததும்ப அற்புதமாக நடனமாடினார். நாட்டைக்குறிஞ்சியில் அமைந்த வர்ணம் நல்ல அடவுகளும், துரிதபாத வேலைகளும் கொண்டு அழகு வடிவமாக இலங்கியது. பாபநாசம் சிவனின் ''நாராயணா'' என்னும் பாடல் மிகவும் உருக்கமாக இருந்தது. செல்வி சாரதா பாடலோடு உருகி, அதியற்புதமாகப் பாவங்களை வெளிப்படுத்தினார்.

அடையாறு லக்ஷ்மணனின் நட்டுவாங்கமும், ஸ்ரீமதி விஜயலட்சுமியின் இனிமையான சாரீரத்தில் எழுந்த பதங்களும் நன்கு அரங்கில் களை கட்டின. குறுகுறுப்பான முக பாவங்களுடையவர் செல்வி சாரதா மூர்த்தி. படத்தைப் பார்த்தால் தெரியவில்லையா? -காந்தன்



# பலே ஒகாஸா—35 வயசு தாண்டினவங்களுக்கு ஓர் ஆரோக்கியப் பாதுகாப்புப் பாலிசி.




வயசு நழுவுதேன்னு மனசை அலட்டிக்கறாங்க ரொம்பப்பேரு. முப்பத்தஞ்சை எட்டினதுமே களை சோர், அசதி, பெருமூச்சு' இதுக்கெல்லாம் காரணம்: வயசு முதிர முதிர, வலுவுக்கு மூலாதாரமான சத்துங்க சில, போதுமான அளவுக்கு உடம்புலே உற்பத்தியாகறதில்லே.

இந்தக் கவலைக்கெல்லாம் முடிவுகட்டுது ஒகாஸா. இனிமே 35 வயசுன்னு ஆனந்தமா நீங்க ஆண்டுநிறைவு கொண்டாடலாம். 'அப்படி என்ன இருக்கு ஒகாஸாவிலே?' 6 பயோ-ரசாயனுதிகள், ஆதாரமான 10 வைட்டமின்கள், 6 உலோக தாதுக்கள், அசுவகந்தா, யோகிம்பைன மாதிரி மூலிகைச் சத்துக்கள்...எல்லாமாச சேர்ந்து உங்க உடம்பை முடுக்கிவிடும், புதுத்தெம்பைத்தரும். அப்புறம் பம்பரம் தான் நீங்க. எந்த சவாலையும் கண்டு விலகாமே சமாளிப்பீங்க.

## **ஒகாஸா** டானிக் மாத்திரைகள்

**உடல்நலத்திற்கு மறுமலர்ச்சி**

ஒகாஸா கோ. பிரை விட். 12, கல்போ ஸ்ட்ரீட், போ. பாக்ஸ் நம்பர் 396, பம்பாய்-400 001

Creative Unit-A 2211-Tam.

# மூட்டை ட்டையாக ஜோக்குகள்

தரஜா



''டாக்டர்! என் குழந்தைக்கு உடம்பு தேறவே மாட்டேங்குது... என்ன பண்ண லாம்?''

''தினமும் ஆப்பிளும் ஹார்லிக்ஸும் சாப் பிடற ஆளாப் பார்த்து மூணு வேளை கடிக்கச் சொல்லுங்கோ!... ஒரே மாசத்திலே உடம்பு தேறிடும்!...''

''ஜெனரல் ஆஸ்பத்திரியில் மூட்டைப் பூச்சிகள் தொல்லை பொறுக்க முடியாத படி உள்ளது...''

— 'தமிழ்த்து' பத்திரிகையில் 'ஆசிரியருக்குக் கடிதம்'



''என்ன இன்னிக்கு உன் நாத்தனார் ரொம் பவும் ஸ்டைல் காட்டறா?''

''ஸ்பெஷல் வார்டிலே யாரோ 'சினிமா நடிகை டிரீட்மெண்டுக்காக வந்திருக்காளாம்! அவளைக் கடிக்க இவளுக்குக்கொடுத்து வைத் திருந்ததாம். பீத்திக்கிறாள்!''



அப்பா மூட்டைப் பூச்சி: ஜூனியர் விடரைக் கடிக்காதேடான்னு படிச்சுப் படிச்சுச் சொன் னேன்.... கேட்டானா நம்ம பையன்?.... என்ன பேச்சுப் பேசறான் பாரு!...''



''உன் பொண்ணுக்குப் பார்த்திருக்கிற மாப்பிள்ளைக்கு என்ன வேலை?''

''இங்கேதான் — எதிரிலே சென்ட்ரல் ஸ்டேஷன்லே... தினமும் பாலாஜி எக்ஸ் பிரஸ்லே திருப்பதி போயிட்டு வரார்!''

''உங்க பையன் சுத்த மக்கா இருக்கான் சார்! 'ரத்த பாசம்னா என்ன?' என்று கேட் டால் 'தெரியாது'ங்கறான்!''



''எப்படி உன் நாத்தனார் மட்டும் ஒரு சினிமா பாக்கி விடாமல் பார்த்துடறா?''

''அவளுடைய கணவர் சினிமாத் தியேட் டர்லேதானே இருக்கார்!...அதனாலேதான்!''



# ஃபோட்டோ பேஜ்

நீச்சல் குளம்; நிழல் படம்!

—எஸ். ஜி. சேஷகிரி



Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031. Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

புதுப்புது வேலை நுணுக்கங்களை நெடு நாட்களாகப்பணியாற்றி முதிர்ந்த அனுபவம் பெற்ற பழைய தொழிலாளர் களிடமிருந்து அறிந்து கொள்வதென் பது தொழிற்துறையின் மரபாகும்.

ஆனால் நாங்களோ, தொழிலாளர்களுக் கென்று ஒருங்கிணைந்த வகுப்புப்பாடங் கள் மற்றும் வேலையோடிணைந்த பயிற்சி திட்டங்களின்மூலம் பல்வேறு தொழில் நுணுக்கங்களைப் பயிலுவித்து, அவர்களை மிகச்சிறந்த தொழிலாளர் களாக உருவாக்குகிறோம். எங்கள் வலிமை எஃகில் மட்டுமல்ல, எங்கள் தொழிலாளர்களிலும் உள்ளது.

ஆண்டுகள் பல உருண்டோடினும் நாங்கள் இளமை குன்றாது விளங்கும் காரணம் இதுவே ஆகும்.

எங்கள் வலிமை மேலும் வளர்ந்து கொண்டே இருக்கிறது.

# எஃகினை யொத்த வலிமை





**டாடா ஸ்டீல்**

TIS 6934

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு